பதிவு எண் எம். 8798



# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

### "தீக்கதிர்" ஏஜெண்டுத் தோழர்கள் கவனத்திற்கு!

தோழர்களே!

நமது பத்திரிகையின் அச்சகத் தொழிலாளர்களுக்கு ஞாயிறு தோறும் விடுமுறை அளிக்கப்படுகிறது. ஞாயிற்றுக் கிழமை விடுமுறையாதலால் மறுநாள் — அதாவது திங்கட்கிழமையன்று மதுரையில் பத்திரிகை வெளி வருவதில்லை. அதேபோன்று வெளியூர்களுக்கு செவ்வாய்க் கிழமையன்று வெளிவராது.

எனவே இதை கவனத்தில் கொண்டு, பத்திரிகை இங்கிருந்து வெளிவராத நாட்களுக்கு, பத்திரிகை அனுப்பப்படவில்லை என்று தவறுதலாக குறிப்பிட்டு எழுத வேண்டாம் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

நிர்வாகி,
தீக்கதிர்.

கதிர் 9-ஏ ] மதுரை 25—9—71 சனிக்கிழமை (வெளியூர் 26—9—71 ஞாயிற்றுக்கிழமை) 4 பக்கங்கள் 13 காசுகள் [ மலர் 32

# கிராமப்புறங்களில் பணக்கார விவசாயிகளின் வளர்ச்சி!

## காங்கிரஸ் நிலச்சீர் திருத்தங்களால் ஏழைவிவசாயிகளுக்கு பலனில்லை!

உங்களை நான் எச்சரிக்கிறேன்! இந்தப் பொந்துக்குள்ளே நுழைஞ்சிடாதீங்க! அங்கே விலையுயர்ந்த உணவுப் பொருள் இருக்குது!

சமீபத்தில் முதலமைச்சர் திரு. கருணாநிதி, தஞ்சை நிலப்பிரபுக்கள் பல நூறு ஏக்கர் நிலங்களை ஒழித்து வைத்திருப்பதைத் தாம் கண்டு பிடித்திருப்பதாக ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியுள்ளார்.

## தி. மு. க. ஆட்சியில் புகார் கொடுத்தவரே கைதானார்!

### போலீசின் அடாதசெயல்!!

குடவாசல், செப். 24 — அரிவாளால் தாக்கப்பட்டு வெட்டுக் காயங்களுடன் புகார் கொடுக்க போலீஸ் நிலையம் சென்றவர்களையே கைது செய்துள்ளனராம் குடவாசல் போலீசார்.

இது பற்றிய விவரம் வருமாறு:

17—?—71-ல் நன்னிலம் தாலுகா பருத்தியூர் ஆவணம் கிராமத்தில் சில விவசாயத் தொழிலாளர்கள். கடைத் தெருவில் சாமான் வாங்கிக்கொண்டு இருந்தார்கள். அதுசமயம் ஒரு ரவுடி நன்ருகக் குடித்துவிட்டு இந்த விவசாயத் தொழிலாளர்களை வாய்க்குவந்தபடி திட்டியும் அரிவாளால் தாக்கியும் உள்ளான். இவன் மிராசுதார்களின் கையாள் என்று கூறப்படுகிறது. இதனால் தங்கையன், பெருமாள் ஆகிய இரு விவசாயத் தொழிலாளர்கள் இடது கை மணிக்கட்டிலும், உள்ளங்கையிலும் பலத்த காயம் அடைந்தனர். அந்தக் காயத்துடன் இரத்தம் சொட்ட சொட்ட குடவாசல் போலீஸ் ஸ்டேசனுக்குச் சென்று புகார் கொடுத்தனர்.

ஆனால் அந்தப் போலீசார் தாக்கியவனைக் கைது செய்யவோ நடவடிக்கை எடுக்கவோ இல்லையாம். காயம்பட்டவர்களுக்கு தகுந்த சிகிச்சைகளை ஏற்பாடு செய்யவில்லை. அது மட்டுமல்லாமல், அவர்களையே கைது செய்து சிறைக்கு அனுப்பியுள்ளனராம்.

போலீசாரின் இந்த அடாத செயல் அவ்வட்டாரத்தில் உள்ள மக்கள் மத்தியில் அதிருப்தியையும், ஆத்திரத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

## பட்டமல்ல வேலை வேண்டும்

### மதுரை மாணவர் கோரிக்கை

மதுரைப் பல்கலைக் கழகத்தின் 5-வது பட்டமளிப்பு விழா செப். 24, 25 உகளில் மதுரை இலட்சுமி சுந்தரம் அரங்கில் நடைபெற்றது.

இதற்குத் தலைமை தாங்க தமிழ்நாடு கவர்னர் கே. கே. ஷாவும், பட்டம் வழங்க சென்னை உயர் நீதி மன்றத்தலைமை நீதிபதி கு. வீராசாமியும் வந்தார்கள்.

இந்தப் பட்டமளிப்பு விழாவினையொட்டி, இந்திய மாணவர் சங்கத்தின் மதுரைக் கிளையின் சார்பில் கீழ்க் காணும் துண்டுப்பிரசுரம் ஒன்றை வெளியிட்டுள்ளது. அதன் முழு வாசகம் வருமாறு.

அனைவருக்கும் வேலை!
அதுவே நமக்குத் தேவை!

வேலை வாய்ப்பென்பது அடிப்படை உரிமை!
அதை வழங்குவது அரசின் கடமை!

5 கோடி வேலையற்றோர்க்கு வேலையளிக்க ரூ. 50 கோடி
75 முதலாளிகளின் இயந்திரங்களை
நவீனமாக்க ரூ. 100 கோடி
—இதுவே இந்திராவின் திட்டம்!

வேலையின்மையைப் போக்க
கருத்தடைக்கு ஆள்பிடிக்கும் தரகு வேலை!
—இதுவே தமிழக கல்வி மாண்புவின் திட்டம்!

மொழிப் பிரச்னையில் நாம்—
போர்வாளாம், பாஸ்பரமாம்!

வாழ்க்கைப் பிரச்னையிலே நாம்—
உறைவாளாம், கற்பூரமாம்!

பட்டம்பெற்ற பட்டாளம் வேலையின்றி இருக்கையிலே,
பட்டமளிப்பென்பது அப்பட்டாளத்தில் சேர
அனுமதிச் சீட்டுதானே!

படித்தோம்! முடித்தோம்! பட்டம்பெற்றோம்!

அடுத்தென்ன?

லாபநோக்குள்ள இச்சமுதாயம் நீடிக்கும் வரை
வேலை வாய்ப்பென்பது கானல் நீரே!
வேலைவாய்ப்பு வேண்டுமெனில், நமது வேலை—

இச்சமுதாயத்தை உடைப்பதே!
சோசலிஸ சமுதாயத்தை அமைப்பதே.

## பிரதம காரியதரிசியைச் சுற்றி மாணவர் கெரோ

இம்பால், செப். 24— மணிப்பூர் அரசாங்க பிரதம காரியதரிசியை, அவரது அலுவலகத்தைச் சுற்றி அமர்ந்துகொண்டு மாணவர்கள் கெரோ போராட்டம் நடத்திவருகிறார்கள்.

அரசாங்க பிரதம காரியதரிசி திரு. டி ஜி. மாவேயின் அலுவலகத்தைச் சுற்றி உயர் நிலைப்பள்ளி, கல்லூரிகளைச் சேர்ந்த 500க்கு மேற்பட்ட மாணவர்கள், வயது வந்த ஆடவருக்கு ஒரு வாரத்திற்கு 6 கிலோ அரிசி சப்ளை செய்யப்படவேண்டும் என்று கோரி இன்று முதல் கெரோ செய்து வருகின்றனர்.

6 கிலோ அரிசி தரப்படும் என்று அரசு உறுதிமொழி தரும் வரை போராட்டம் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

(8 ம் பத்தி தொடர்ச்சி)

தது.

ஆர்ப்பாட்ட முடிவில் அதில் கலந்துகொண்ட 200 க்குமேற்பட்ட ஊழியர்களுக்கு சங்கத் தலைவர் மேத்தா நன்றி கூறினார்,

நாளையும் தொடர்ந்து ஆர்ப்பாட்டம் நடைபெறும்.

## அ. இ. விவசாயிகள் மாநாட்டில் ஏ. கே. கோபாலன் முழக்கம்!

ரூ காகலன் (ஜலந்தர்) செப். 24— அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 2 வது மாநாடு பஞ்சாப் மாநிலத்திலுள்ள ரூர்காகலன் வெகு சிறப்பான முறையில் ஆரம்பமாயிற்று. இந்திய நாடெங்குமிருந்து விவசாயிகள் சங்கப் பிரதிநிதிகள் நூற்றுக் கணக்கில் வந்துகொண்டேயிருக்கின்றனர்.

மேற்கு வங்கத்திலிருந்து மிகப் பெரும் பிரதிநிதித்துவக் குழு வந்துள்ளது.

தமிழ் நாட்டிலிருந்து தோழர்கள் என். சங்கரய்யா, ஆர். ராமராஜ், கே. ஆர். ஞானசம்பந்தன் தலைமையில் பிரதிநிதிகள் வந்துள்ளார்கள்.

இந்த மாநாட்டிற்கு சமீபத்தில் அகில இந்திய விவசாயிகள் சங்கத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. தலைமையுரையாற்றினர்.

ஏ. கே. கோபாலன்

அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

விவசாயத்துறையில் இந்நாட்டில் அடிப்படையான மாறுதல் காணவேண்டுமானல் விவசாயிகளிடையே செயல்படும் பல்வேறு மத்திய சங்கங்கள் இணைந்து நின்று போராட வேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தார்.

விவசாயிகள் மீது விழுந்துள்ள பயங்கரமான கடன் சுமையை எதிர்த்தும் நியாயமான கூலி உயர்வுக்காகவும், உறுதியான போராட்டங்கள் நடத்தவேண்டுமென்றார்.

### புதுவிதஉறவுமுறைகள்

அவர் மேலும் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

கிராமப்புறப் பொருளாதார அமைப்பில் இன்று புதுவிதமான முதலாளித்துவ உற்பத்தி முறைகள் பல்வேறு உருவங்களில் புகுந்துள்ளன இதனால், பல புதிய பிரச்னைகள் தோன்றியுள்ளன.

இந்தப் பிரச்னையை நாம் தெளிவாகவும் துல்லியமாகவும் ஆராய்ந்துபுரிந்துகொள்ளவில்லையென்றால் விவசாயிகளை ஒன்று சேர்த்து அவர்தம் உரிமைக்காகப் போராட வழிகாட்டுவது முடியாமல் போகும்,

சில கோஷங்களை மட்டும் வைத்துக்கொண்டு முழங்கினால் போதாது. கிராமப்புறங்களில் இன்று ஏற்பட்டு வரும் மாறுதல்களைப் பற்றித்துல்லியமான ஞானம் நமக்கு இருந்தாக வேண்டும்.

துரதிர்ஷ்ட வசமாக இன்று நமது இயக்கம் கிராமபுறத்தில் ஏற்பட்டுவரும் இத்த நிலைமையைப் புரிந்துகொண்டு செயல்படும் நிலைமையில் இல்லை.

சீக்கிரமாகவே இந்தக் குறையைப் போக்க நாம் நடவடிக்கை எடுத்தாக வேண்டும்.

### அடிப்படையானது

கிராமப்புறத்தில் ஏற்பட்டுள்ள விவசாய நெருக்கடி தான் இந்தியப் பொருளாதார நெருக்கடியின் அடித்தளமாகும். இந்த நெருக்கடி இன்று மேலும் தீவிரமாக ஆரம்பித்து விட்டது.

பொருளாதார நிலைமையைப் பற்றிய இவ்வாண்டு அரசாங்க அறிக்கை இதை ஒப்புக் கொள்கிறது.

கிராமப்புறத்தில் தோன்றியுள்ள பணக்கார விவசாயிகள் மேலும் மேலும் பணக்காரர்களாகவும், ஏழை விவசாயிகள் ஒட்டாண்டிகளாகவும் மாறி வருவதை அது ஒப்புக்கொள்கிறது.

### பசுமைப் புரட்சியின் பலன்

மாபெரும் பசுமைப்புரட்சியைச் சாதித்து விட்டதாக ஆட்சியாளர்கள் பசப்பிய போதிலும் ஏழைக்கும் பணக்காரனுக்கும் இடையிலுள்ள இடைவெளி பயங்கரமான வேகத்தில் அதிகரித்துக் கொண்டே போகிறது.

காங்கிரஸ் ஆட்சியாளர்களால் கொண்டுவரப்பட்ட நிலச்சீர்திருத்தங்கள் பணக்கார விவசாயிகளை உருவாக்கி வளர்க்க உதவி செய்தது போலவே, ஆட்சியாளர்களின் பசுமைப் புரட்சியும் பணக்கார விவசாயிகளையும் நிலப்பிரபுக்களையுமே மேலும் பருத்துக் கொழுக்கத்தான் உதவி செய்துள்ளது.

அதிக உற்பத்தியும், நல்ல பாசன வசதிகளும் ஏனைய உற்பத்தி சாதனங்களும் அரசாங்கத்தின் உதவிகளும் பணக்கார விவசாயிகளையும் நிலப்பிரபுக்களையும் பயனடையச் செய்தனவே தவிர, ஏழை நடுத்தர விவசாயிகளுக்குப் பலனளிக்கவில்லை.

இவ்வாறு தோழர் ஏ. கே. கோபாலன் குறிப்பிட்டார்.

(மாநாட்டின் முழு விவரங்களும் பின்னால் வெளிவரும்.)

## அழிவிற்கு முன்பு வெறியாட்டம்!

### வடவியத்நாமில் அமெரிக்க யுத்த நடவடிக்கை!

"நாம் தான்" ஏடு கண்டனம்

ஹனாய் செப். 24— வடவியட்னும் மீது மீண்டும் யுத்தத்தை தொடருவதற்கான முஸ்தீபில் அமெரிக்கா இறங்கியிருக்கிறது. கடந்த செவ்வாயன்று வடவியட்னுமின் தென் பகுதியில் விமானத் தாக்குதலை அமெரிக்கா தொடங்கியதாக வடவியட்னும் தெரிவித்துள்ளது.

ராணுவச் செய்திப் பத்திரிகையான குயை டாய் நான் தான் இந்தத் தாக்குதலுக்கு வாஷிங்டன் பச்சை விளக்குக் காட்டியதாகக் குற்றஞ்சாட்டியுள்ளது. வியட்னுமில் அமெரிக்கர்களின் நடவடிக்கைகளுக்கு ஆதரவாகவும், அமெரிக்கர்களையும், வியட்னுமியர்களையும் நெருக்கடி நிலைமைகளிலிருந்து தப்புவிக்காவும், இந்தோ சீனக்கொள்கையில் அமெரிக்காவின் தோல்வி கண்டு அதிருப்தியடைந்திருக்கும் சைகோன், நாம்பென், வியன்டியன் அரசுகளைத் திருப்திப்படுத்தவுமே என்று அது மேலும் கூறுகிறது.

இது முட்டாள்தனமான நடவடிக்கை என்று குற்றம் சாட்டும் அதே நேரத்தில் வடவியட்னுமின் தொழிலாளிகளின் பத்திரிகையான நான் தான் இந்தப் படுபயங்கரமான ஆத்திரச் செயல்கள் இந்தோ சீனு மீதான நிக்சனின் கொள்கை தோற்று விட்டதயே காட்டுகிறது அதன் இறுதிகாலத்தில் ஆடும் வெறியாட்டம் என்பதையே காட்டுகிறது என்றும் எழுதுகிறது.

## தஞ்சையில் கொட்டும் மழையில் பாங்கு ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்

தஞ்சாவூர், செப். 24— சர்வீஸ், சம்பள உயர்வுகோரியும் நிலைமையை அபிவிருத்தி செய்யக்கோரியும் தஞ்சை பர்மனென்ட் பாங்கு ஊழியர்கள் கொட்டும் மழையையும் பொருட்படுத்தாது ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

ஒருவாரமாக இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றுவருகிறது.

இந்த பாங்கின் டைரக்டர்கள் கூட்டம் மத்திய அலுவலகத்தில் நடைபெற்றது. அதையொட்டி சங்க நிர்வாகக்குழு முடிவுப்படி பாங்கின் ஒவ்வொரு கிளையையும் சேர்ந்த பிரதிநிதிகள் இன்றைய ஆர்ப்பாட்டத்தில் வந்து கலந்து கொண்டார்கள்.

காலை 10 மணியிலிருந்தே ஆர்ப்பாட்டம் தொடங்கி பகல் முழுவதும் நடைபெற்றது. சங்கத்தின் தலைவர் மேதா, இணைச்செயலாளர் சண்முகதாசன் பொருளாளர் ராதாகிருஷ்ணன் ஆகியோர் தலைமையில் இது நடைபெற்றது.

மாலை 5 மணிக்கு மேல் ஸ்டேட்பாங்கு ஊழியர்களும் நகரிலுள்ள மற்ற பாங்குகளின் ஊழியர்களும் இந்த ஆர்ப்பாட்டத்தில் வந்து கலந்து கொண்டனர்.

மாலை 5-15 மணிக்கு மழை கொட்டு கொட்டு என்று கொட்டிய போதிலும் பாங்கு ஊழியர்கள் யாரும் கலைந்து செல்லாமல் 6-45 மணிவரை தொடர்ந்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள்,

கூட்டத்திலிருந்து ஒரு டைரக்டர் வெளியே சென்ற போது ஊழியர்கள் எழுப்பிய கோஷங்கள் பேய் மழையில் இடி இடித்தது போன்றிருந்

(3ஆம் பத்தி பார்க்க)

## "தீக்கதிர்" ஏஜெண்டுகள் முக்கிய கவனத்திற்கு

தோழர்களே!

செப்டம்பர் மாதம் 1-ந் தேதி முதல் 15-ந் தேதி வரை அனுப்பிய பிரதிகளுக்கு (அதாவது வெளியாகாத இரண்டு நாட்கள் போக 13 நாட்களுக்கு) கணக்கிட்டு பில் போட்டு அனுப்பி வைத்துள்ளோம்.

பில் கிடைத்ததும் பணத்தை உடனடியாக அனுப்பிவைக்க வேண்டுகிறோம்.

30—9—71க்குள் பில் பணம் அனுப்பிவைக்கவில்லையென்றால் அக்டோபர் மாதம் முதல் நாளிலிருந்து பத்திரிகை அனுப்புவது கண்டிப்பாக நிறுத்தப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நிர்வாகி,
தீக்கதிர்.

தீக்கதிர்

# ஐ. நா. வில் சீன!

உலகத்தில் மிகப்பெரிய நாடு மக்கள் சீனம் அதன் ஜனத்தொகை 70 கோடிக்கு மேல். உலக ஜனத் தொகையில் கிட்டத் தட்ட 4-ல் 1பங்கு. சென்ற 20 ஆண்டுகளுக்கு மேலாக இந்த நாட்டுக்கு உலக நாடுகளின் சபையில் இடமில்லை. இவ்வாறு செய்து ஐ. நா. வையே முடமாக்கி வைத்ததில் தலைமைப் பாத்திரம் வகித்தது அமெரிக்கா.

ஐ. நா. வில் சீனவுக்கு இடமளிப்பது "ஒரு முக்கியமான விஷயம்'' என்றும் எனவே, ஐ. நா. வின் பொதுச் சபையில் 3-ல் 2 பங்கு ஓட்டுகள் கிடைத்தால் தான் அதற்காக தீர்மானம் நிறைவேறலாம் என்றும் அமெரிக்கா இதுவரை குதர்க்க வாதம் செய்துவந்தது. இதற்கு ஆதரவாக தன் பிடியில் உள்ள நாடுகளைக் கை தூக்கவைத்து சீனவுக்கு ஐ. நா. வில் இடமளிக்கும் தீர்மானம் நிறைவேருமல் செய்து வந்தது.

இன்று நிலைமை பெரிதும் மாறுபட்டுள்ளது. கடுமையான பொருளாதார நெருக்கடியில் சிக்கித் தவிக்கும் அமெரிக்கா, செழிப்பின் சந்தையான சீனத்தின் உறவை நாடுகிறது. நிக்சன் தனக்கு அழைப்பு அனுப்புமாறு சீனத் தலைவர்களுக்கு தூது அனுப்பி அழைப்பைப் பெற்றுள்ளார். சீனத்துக்குப் போக இருக்கிறார்.

இந்நிலையில், இனி சீனத்தை ஐ. நா விலிருந்து ஒதுக்கிவைக்க இயலாது என்ற முடிவுக்கு அமெரிக்கா தள்ளப்பட்டுள்ளது. தனது 20 வருடக் கொள்கையின் தோல்வியை அமெரிக்கா இன்று உலகறிய ஒப்புக்கொள்ள வேண்டியுள்ளது. தானே முன்நின்று மக்கள் சீனத்துக்கு ஐ. நா. விலும், அதன் பந்தோபஸ்து கவுன்சிலிலும் இடமளிக்கக் கூடிய தீர்மானத்தை முன் மொழிய முன்வந்தது. தன்னுடன் சேர்ந்து இதர சில நாடுகளையும் இத் தீர்மானத்தை முன்மொழிய தயார் செய்தது.

ஆயினும், தேளுக்கு கொடுக்கு இருக்கும் வரை விஷம் இருக்குமல்லவா? அந்தத்தீர்மானத்திலேயே பார்மோசாவும் ஐ. நா. வில் நீடித்து ஒரு உறுப்பினராக இருக்க வகை செய்தது. அதாவது பார்மோசா சீனவின் பகுதியல்ல; தனி நாடு, என்று பொருள். இதுதான் இரு சீனக்கொள்கை என்பது. இதன் மூலம் தனது கைப்பாவையான சியாங்-கே-ஷேக் கும்பல்நீடித்து ஐ.நா வில்இருக்கச் செய்ய சூழ்ச்சி செய்தது. அடுத்த மாதக்கடைசியில் நடக்க இருக்கும் பொதுச்சபைக் கூட்டத்துக்கான நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்கும் ஆயத்தக்குழுக் கூட்டத்தில் ஒரு முயற்சி செய்துள்ளது ஏற்கனவே அல்பேனியாவும் இதர 17 நாடுகளுடனும் முன்மொழிந்துள்ள தீர்மானம் ஒன்று முதலிடம் பெற்றிருந்தது, நிகழ்ச்சி நிரலில். அத்தீர்மானத்தின்படி சீனத்தின் இடத்தை இதுகாறும் பிடித்து வைத்திருந்த பார்மோசா வெளியேற்றப்பட்டு, மக்கள் சீனம் தனது இடத்தை பெறவேண்டும் என்பதே. இந்தத் தீர்மானத்துடனேயே தனது தீர்மானத்தைதையும் சேர்த்து ஒன்ருக்கி, நிகழ்ச்சி நிரலில் வைக்க வேண்டும் என்பதே அமெரிக்காவின் முயற்சியாக இருந்தது. அல்பேனியாவின் தீர்மானத்தை முதலில் தனியாகவும், பின்னர்தான் தனியாக அமெரிக்காவின் தீர்மானத்தையும் எடுத்துக் கொள்ளமுடியும் என்று குழு, பெரும்பான்மை மூலம் முடிவு செய்துவிட்டது, முறைப்படி அல்பேனியாவின் தீர்மானம் பொதுச்சபைக் கூட்டத்தில் முதலில் எடுக்கப்பட்டு நிறைவேறிவிட்டால் அமெரிக்காவின் தீர்மானம் அடிபட்டுப்போகும். காற்று எந்தப்பக்கம் அடிக்கிறது என்பதற்கு இந்த ஆயத்தக்குழு நடவடிக்கை ஒரு எடுத்துக் காட்டு. அமெரிக்க ஏகாதிபத்தியம் இன்னும் எவ்வளவு சூழ்ச்சிகள் செய்தாலும், சீன ஐ நா. வில் தனக்குரிய இடத்தைப்பெறுவது வெகுதொலைவில் இல்லை.

---

### கருத்தடை செய்ய

## ஆட்களைப் பிடித்து வாருங்கள்! வேலைதேடும் பட்டதாரிகளுக்கு மந்திரி ஆலோசனை!

சென்னை, செப். 22— வேலையில்லாமலிருக்கும் இளைஞர்கள் கருத்தடைக்கு ஆள் பிடித்துக்கொடுத்து பணம் சம்பாதிக்கலாம் என்று தமிழ்நாடு கல்வியமைச்சர் நெடுஞ்செழியன் யோசனை தெரிவித்தார். சேலத்தில் நடைபெற்ற அண்ணா நற்பணி மன்ற ஆண்டுவிழாவில் கலந்து கொண்டு பேசும்போதே நெடுஞ்செழியன் இந்த யோசனையை வெளியிட்டார்.

அவர் பேசுகையில் மேலும் கூறியதாவது:—

"இளைஞர்கள் வேலையில்லாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு பணம் சம்பாதிக்கும் வழி தெரியவில்லை. கருத்தடைக்கு ஆள் பிடித்து கொடுத்து பணம் சம்பாதிக்கலாம். ஒரு நாளைக்கு ஒருவரை கருத்தடைக்கு அழைத்துச் சென்றால் போதும், பத்து ரூபாய் பணம் கிடைக்கும்.

"அப்படி மாதம் குறைந்தது 200 ரூபாயாவது கிடைக்கலாம். அவர்களுக்கு வருமானமும் கிடைக்கும். நாட்டின் பிரச்சினை தீர்ந்தாற் போலவும் இருக்கும்.''

---

# முதலாளித்துவ நாடுகளில் மக்கள் மீது உயரும் வரிச்சுமைகள்

நியூயார்க், செப். 20— முதலாளித்துவ உலகில் நிதி நெருக்கடியும் ஆயுதப் போட்டியும் கடந்த சில ஆண்டுகளில் அதிகரித்திருப்பது யாவரும் அறிந்த செய்தி. இதன் விளைவாக முதலாளித்துவ நாடுகளில் வரிச்சுமை அதிகரித்து, மக்களின் வாழ்க்கைத் தரமும் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

1967 உடன் முடிந்த பத்தாண்டுக் காலத்தில் மொத்த வரிப்பணம் அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் 100 சதவிகிதமும், ஜெர்மன் சமஷ்டிக் குடியரசில் 120 சதவிகிதமும், பிரான்சிலும் கனடாவிலும் 50 சதவிகிதமும், ஜப்பானில் 300சதவிகிதமும்அதிகரித்தது. 1969 இல் பொதுஜன உபயோகத்துக்கான உற்பத்திப் பொருள்களின் மீது அமெரிக்காவில் 29 சதவிகிதமும், பிரிட்டனில் 33 சதவிகிதமும், ஜெர்மன் சமஷ்டிக் குடியரசில் 35 சதவிகிதமும், பிரான்சில் 37 சதவிகிதமும், ஜப்பானில் 19 சதவிகிதமும் வரிகள் விதிக்கப்பட்டன. வரிகளின் மூலம் மேன் மேலும் நிதிவளம் தேடுவது, முதலாளித்துவ நாடுகளின் யுத்தப் பிற்கால வளர்ச்சியின் மீது ஆட்சி செலுத்தும் பிரதான நியதிகளில் ஒன்ருகி விட்டது.

### தலா விகித வருடவரி அதிகரிப்பு

அமெரிக்காவில் மொத்த வரிப்பணம் 1939இல் 1,500 கோடி டாலர்களாகவும், 1946 இல் 5,100 கோடி டாலர்களாகவும், 1969 இல் 31,890கோடி டாலர்களாகவும் அதிகரித்தது.

தலா விகித வரிகளும் படிப்படியாக உயர்ந்து வந்தன. தலா விகித வருட வரி விதிப்பு அமெரிக்காவில் 1938 இல் 111 டாலராகவும், 1950 இல் 337 டாலராகவும், 1968 இல் 1,099 டாலராகவும் அதிகரித்தது; மேற்கு ஜெர்மனியிலோ 1950 இல் 433 மார்க்குகளாக இருந்தது 1966 இல் 1 863 மார்க்குகளாக உயர்ந்தது.

இதே சமயத்தில் இன்ஸ்யூரன்ஸுக்காக கழிவுகளும் அதிகரித்தன. 1969 இல் அமெரிக்காவில் சமூக இன்ஸ்யூரன்ஸ் நிதிக்கான மொத்தக் கழிப்புத்தொகை வருமானத்தில் 5·2 சதவிகிதமாக இருந்தது; இந்த நிதிக்கு 9·2 கோடி ஆலை அலுவலக ஊழியர்கள் பணம் செலுத்தினர். அதே சமயத்தில் ஆண்டு ஒன்றில் 40 ஆயிரம் டாலருக்கு மேல் சம்பாதித்தவர்களோ, இதற்கு ஒரு சதவிகிதத்தையே செலவிட்டனர். இன்யூரன்ஸ் கழிப்புக்குரிய கூடுதல் தொகையின் வரம்பு 7,800டாலர்கள் என்று நிர்ணயிக்கப் பட்டிருந்ததே இதற்குக் காரணம்

### நேர்முக வரிகள்

யுத்தத்துக்குப் பின்னர் சகல முதலாளித்துவ நாடுகளிலும் நேர்முக வரிகள் அதிகரித்தன.

நேர்முக வரி விதிப்பினல் வரும் வருமானத்தில் மூன்றில் இரு பங்கு ஆலை அலுவலக ஊழியர்களின் வருமானத்திலிருந்தே வருகிறது; இந்தத் தொகையின் சதமானம் ஆண்டுதோறும் அதிகரித்துக் கொண்டே போகிறது. 1968-ல் அமெரிக்க நாட்டின் மத்திய வரிகளில் 66 சதவிகிதத்தை அமெரிக்க உழைப்பாளி மக்களே செலுத்தினர்; 1970-ல் இது 68 சதவிகிதமாக உயர்ந்தது.

1960-ம் ஆண்டுகளின்போது ஜெர்மெனியில் மக்களது சொந்த உபயோகத்துக்கான மொத்தச்செலவுகளில் 21 சதவிகிதம் மறைமுக வரியாகச் செலுத்தப்பட்டது. சில குறிப்பிட்ட பொருள்களின் விஷயத்திலோ இந்தச் சதமானம் இன்னும் அதிகமாக இருந்தது. சர்க்கரைமீது விதிக்கப்பட்ட எக்சைஸ் வரி பிரிட்டனில் 26 சதவிகிதமாகவும், இத்தாலியில் 34 5 சதவிகிதமாகவும், ஜப்பானில் 39 சதவிகிதமாகவும், மேற்கு ஜெர்மனியில் 15 சதவிகிதமாகவும் இருந்து வருகிறது. இந்த ஆண்டு மார்ச் மாதத்தில் குறைந்த வருமானமுள்ள குடும்பங்கள் தமது வருமானத்தில் 20 சதவிகிதத்துக்குமேல் மறைமுக வரிகளாகச் செலுத்தினர் என்றும், அதே சமயத்தில் வசதி படைத்தவர்கள் 12 சதவிகிதமே செலுத்தினர் என்றும் லண்டன் பத்திரிகையொன்று அண்மையில் எழுதியுள்ளது.

உழைக்கும் மக்கள் தமது வருமானத்தில் வரிகளுக்காகச் செலவிடப்படும்தொகைபிரிட்டனிலும் மேற்கு ஜெர்மனியிலும் 36 சதவிகிதமாகவும், பிரான்சில் சுமார் 33 சதவிகிதமாகவும், அமெரிக்காவில் 37 சதவிகிதமாகவும் உள்ளது

---

### கடலூர் விவசாயிகளின்

# மறியல்!

## 80 பேர் கைது!

உதகை, செப். 24— தமிழக அரசின் நில வெளியேற்றத்தை எதிர்த்து, கூடலூர் விவசாயிகள் மறியல் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். கன மழையையும் பொருட்படுத்தாமல் தாசில்தார் அலுவலகத்தின் முன்பும் சேரம்பாடி நிலவெளியேற்ற தாசில்தார் அலுவலகத்தின் முன்பும் தினமும் மறியல் நடைபெற்று வருகிறது. இது வரை 80 பேர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர் ஊர்வலங்களும், பொதுக்கூட்டங்களும் நடைபெற்று வருகின்றன.

விவசாயிகளின் கோரிக்கைகளை நேரில் எடுத்து இயம்பிட தம்மைக் காண சென்னை வந்த போராட்டக் குழுவின் தலைவர்களை சந்திக்க கருணநிதி மறுத்துவிட்டார். ஏற்கனவே வெளியேற்றப்பட்ட குடும்பங்கள் நிராதரவாக நடுத்தெருவில் நிற்கின்றனர்.

முதலமைச்சரின் கருணையற்ற போக்கினை கண்டிக்கவும் விவசாயிகளின் உள்ளக் குமுறலை எடுத்துக்காட்டவும் 25-ஆம் தேதி உதகைவரும் முதலமைச்சருக்குகருப்புக்கொடி காட்டுவதென போராட்டக் குழுவினர் முடிவு செய்தனர்.

மாவட்டக்கலெக்டர், போலீஸ் அதிகாரி இருவரும் போராட்டக் குழுவினரை அழைத்து 22—9—71-ல் இரவு 9 மணிக்கு கூடலூரில் பேச்சுவார்த்தை நடத்தினர்கள். விவசாயிகளின் பிரச்னைகளை அரசு அனுதாபத்துடன் பரிசீலித்து வருகிறது. எனவே, கருப்புக்கொடி ஆர்ப்பாட்டத்தைக் கைவிடும்படி வேண்டிக்கொண்டனர். போராட்டக் குழுவினரும் சம்மதித்தார்கள்.

(ந-நி)

---

### எச். எம். எஸ். தலைவர்

கோவை, செப். 23— கோவையில் நடைபெற்ற ஹிந்து மஸ்தூர் சபா மாநாட்டில் அதன் தலைவராக திரு. ஏ. சுப்பிரமணியம் எம்.எல்.ஏ. தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

### பங்களா தேஷ் அகதிகள்

புதுடில்லி, செப். 23— பங்களா தேஷ் அகதிகள் எண்ணிக்கை 90 லட்சமாக உயர்ந்துள்ளது.

---

# குறிப்புகள்

## 1 மணி நேர விழாவிற்கு ரூ. 1 லட்சம் செலவா?

நீலகிரி மாவட்டத்தின் மின்சாரத் திட்ட முழுமை விழாவில் முதலமைச்சர் கருணநிதி கலந்துகொள்கிறர். 25-ஆம் தேதி நடைபெறும் ஒரு மணி நேர விழாவிற்கு உதகை நகராட்சி திடலில் அலங்காரப்பந்தல் அமைக்கப்படுகிறது. பந்தல் அமைக்க மட்டும் ரூ. 36,000. கூடலூர் பகுதியிலிருந்து மூங்கில்கள் கொண்டுவரப்படுகின்றன. மின் வாரியத்தின் 20 லாரிகள் ஒருவார காலமாக ஓடுகின்றன. பந்தலில் பரப்பிட 80 லாரிகளில் வெண் மணல் மேட்டுப்பாளையத்திலிருந்து கொண்டு வரப்பட்டிருக்கின்றது. 200 ஊழியர்கள் இரவு பகலாக வேலையில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றனர்.

நீலகிரியிலுள்ள மின்வாரிய அதிகாரிகள் அனைவரும் உதகை நகரில் முகாமிட்டுள்ளனர். கோவையிலிருந்து பெரியஅதிகாரிகள் தினமும் வந்து போகும் வண்ணமிருக்கின்றனர்.

அலங்காரப் பந்தலில் வண்ண விளக்குகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. திடலில் உயர் சக்தி கொண்ட மின் விளக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. நெடுஞ்சாலைகளில் அலங்கார வளைவுகள் அமைக்கப்பட்டு வருகின்றன விழாவினை விளம்பரப்படுத்த பல வண்ணச் சுவரொட்டிகள் ஆயிரக்கணக்கில் அச்சடிக்கப்பட்டிருக்கின்றன.

மின்சாரம் கிடைக்காத கிராம வாசிகளும், குடிசை வாழ் மக்களும் எங்கே மின்சாரம் என கேட்கின்றனர். ஒரு மணி நேர விழாவிற்கா இவ்வளவு தடபுடலான ஏற்பாடுகள், என பொதுமக்கள் வியப்பிலாழ்ந்துள்ளனர்.

உதகையில் வணிக வரி அலுவலகம் அரசினரால் கட்டி முடிக்கப்பட்டு ஆறு மாத காலமாகிறது. வணிக வரி அலுவலகமும் கட்டிடத்தில் செயல்பட்டு வருகிறது. எனினும், 25-ம்தேதி வணிகவரி அலுவலகத்தை முதலமைச்சர் கருணநிதி திறப்பு விழா நடத்த ஐயாயிரம் ரூபாய் செலவில் விழா எடுக்கிறர்கள்.

விசித்திரமாக இல்லையா? ஆம்! விசித்திரந்தான்! "நான் சாமானியன்'' என்று சொல்லிக்கொள்ளும் முதலமைச்சருக்கு பண்டைக்காலத்து-சேர, சோழ பாண்டிய மன்னர் காலத்து வரவேற்புகள் நடைபெறுகின்றனவே! இது தி. மு. க. பேசிவரும் சிக்கனத்திற்கும் சாதாரண மனிதத்தனத்திற்கும் அடையாளமோ?

---

### நெசவாளர் போராட்டம்

# அரசு தலையிடக் கோரிக்கை

## விவசாயத் தொழிலாளர் சங்க செயலாளர் ஜி. வீரையன் அறிக்கை

கும்பகோணம், செப்-24 குடந்தை, பாபநாசம் தாலுக்காவிலும் டி. பழுவூரிலும் இருக்கும் சுமார் 15 ஆயிரம் கைத்தறிப்பட்டு நெசவுத் தொழிலாளர்கள், இன்று நாட்டில் ஏற்பட்டிருக்கும் கடுமையான விலைவாசி உயர்வும் அதன் சுமையால் அவர்கள் வாழ்க்கையில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியும் தாங்க முடியாத நிலையில் இருப்பதால், குறைந்த பட்சக் கூலி உயர்வு கேட்டு பல்வேறு வழிகள் மூலம் பட்டு முதலாளிகளிடம் பேசி பார்த்து பலன் இன்றி போன பிறகு, 10—9—71 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள் 13 தினங்களாக வேலையில்லாமல் இருப்பதால் மேலத் தஞ்சைப்பகுதியில் 15 ஆயிரம் குடும்பங்கள் அவதிக்கும் அல்லலுக்கும் ஆளாகி இருக்கின்றன. இதற்கிடையில் 92 பேர்கள் கைது செய்யப்பட்டு திருச்சி மத்திய சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்கள். வேலை நிறுத்தம் தொடர்ந்து நடந்துவருகிறது.

தமிழக அரசு உடன் தலையிட்டு விரல் விட்டு எண்ணப்படும் பட்டு முதலாளிகள், 15 ஆயிரம் குடும்பத்தை பட்டினி போடும் கொடுமையிலிருந்து விடுவித்து, போராடும் நெசவு தொழிலாளர்கட்கு நியாயம் வழங்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தஞ்சை மாவட்ட விவசாயத்தொழிலாளர் சங்கச் செயலாளர் என்ற முறையில் தமிழக அரசை வற்புறுத்தி கேட்டுக் கொள்கிறேன்.

கூலிக்காக போராடும் தொழிலாளர்களே! நீங்கள் உறுதியாக போராடுங்கள்; அதன் மூலம்தான் உங்களுக்கு நியாயம் கிடைக்கும் எங்கள் விவசாயத்தொழிலாளர்களின் அனுபவமும் அதுதான் நீங்கள் தனியே போராடுவதாக நினைக்காமல் நியாயம் கிடைக்க எத்தனை இடர்பாடுகள் வந்தாலும் உறுதியாக இருக்கவும். தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்கம் எல்லா வகையிலும் உங்களுக்கு ஆதரவு அளிக்கும் எனக் கூறிக்கொள்கிறேன்.

---

### மின் தொழிலாளர் தலைவர்கள்

# தாக்கப்பட்டதைக் கண்டித்து மதுரையில் ஆர்ப்பாட்டம்!

மதுரை, செப். 24— மின்பாறையில். தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கத்தின் மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் சி. சாந்த் மொகமதுவையும் ஆலியார் அணைக்கட்டு திட்டத் தொழிலாளர் சங்கப் பொதுச்செயலாளர் தோழர் வி. துளசிதாசனையும், மற்றும் பல தோழர்களையும் தி. மு. க. குண்டர்கள் தாக்கி படுகாயப் படுத்தியதை எதிர்த்தும், சம்பந்தப்பட்டவர்கள் மீது நடவடிக்கை எடுக்கக் கோரியும், மதுரை மத்திய அலுவலத்திற்கு முன்பு 23—9—71 மாலை 5-மணிக்கு தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் கண்டன ஆர்ப்பாட்டம்செய்தனர் இந்த ஆர்ப்பாட்டத்திற்குதமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கப் பொதுச்செயலாளர் தோழர் ஜீ. ஜீ. சுந்தரம் தலைமை வகித்தார். ஆர்ப்பாட்டத்தில் ஈரோடு உற்பத்திப் பிரிவு தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் கே. பி. இராமசாமியும் மதுரை-இராமநாதபுரம் திட்ட மின்சாரத் தொழிலாளர் சங்கக் கூட்டுச் செயலாளர் தோழர் டி. பாண்டியும் கலந்துகொண்டனர்.

பின்பு நடைபெற்ற கூட்டத்திற்கு தோழர் கே. பி. இராமசாமி தலைமை வகித்தார். தோழர் ஜீ. ஜீ சுந்தரம் பேசினர்.

காலிகள் மீது நடவடிக்கை எடுக்கக்கோரியும், கைது செய்யப்பட்டவர்களை விடுதலை செய்யக் கோரியும் தமிழக முதலமைச்சருக்கும், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கும் ஊழியர் சங்கப் பொதுச் செயலாளர் தந்தி அனுப்பியுள்ளர்.

### மின் ஊழியர்கள் அறைகூவல்!

மின் பாறையில் ஊழியர் சங்கத்தின் மாநில நிர்வாகக் குழு உறுப்பினர் தோழர் சாந்த் மொகமது தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் துளசிதாசனும் மற்றும் பலதோழர்களும் தி. மு. க. காலிகளால் தாக்கப்பட்டதைக் கண்டித்து மாநிலம் முழுவதிலும் உள்ள மின்சார ஊழியர் சங்கத்தை சேர்ந்ததோழர்கள் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்தும்படி ஊழியர் சங்கத்தின் பொதுச் செயலாளர் தோழர் ஜீ. ஜீ. சுந்தரம் வேண்டுகோள் விடுத்துள்ளார்

---

### ஆசிரியருக்கு வரையும் மடல்

# தொழிலாளர்கள் ஒன்றுபட வேண்டும்...

ஐயா,

தமிழ்நாடு மின் தொழிலாளர் மத்திய அமைப்பின் வழிகாட்டுதலின் கீழ் இயங்குவது தென் ஆற்காடு மாவட்ட மின்சாரத் தொழிலாளர் சங்கம்.

அங்கீகரிக்கப்பட்ட மின்சாரத் தொழிலாளர் சம்மேளனமும் 10—9—71-ல் இதன்வழியிலேயே வர நேர்ந்ததைத் தோழர்கள் யாவரும் அறிவார்கள். தெ. ஆ. மா. மி. தொ. சங்கம் (20/எஸ்.ஏ.டி.) நீண்டநாளாக தீர்க்கப் படாத முக்கிய 12 கோரிக்கைகளுக்காக 25—8—71-ல் உண்ணாவிரத அறப்போராட்டம் துவங்கியது. நமது மத்திய அமைப்பின் தலைவர் ஜீ. கோவிந்தராஜன் (முன்னாள் எம்.எல்.ஏ.) அதை முடித்து வைத்தார்.

நம்சங்கம் வைத்திருந்த முக்கிய கோரிக்கைகள் பலவற்றை விட்டு விட்டு சிலவற்றை மட்டும் எடுத்துக்கொண்டு அங்கீகாரம் பெற்ற சம்மேளனமும் 10—9—71-ல் போராட முன்வந்தது.

இதிலிருந்து, தொழிலாளர்கள் ஒன்றுபட்டுப் போராடித்தான் கோரிக்கைகளை அடைய முடியுமேதவிர, நாமே அரசாக இருந்தாலும், அங்கீகாரமே நமது பையில் இருந்தாலும், போராடாமல் கோரிக்கைகள் பலவற்றைப் பெறமுடியாது என்பதை யாவரும் அறிய வேண்டும். ஒரு சிலர், சில்லறைச் சலுகைகளான ஒரு சிலருக்கு ஊர் மாற்றம் முதலியவைகளைப் பெற்றுக் கொடுத்து 'வெற்றி வெற்றி' என்று தம் பட்டம் அடிக்கலாம். ஆனல் அது உண்மையான வெற்றி ஆகாது.

அன்புள்ள,

கி. ஜானகிராமன்,
பொதுச்செயலாளர்,
தெ. ஆ. மா. மி. தொ. சங்கம்
விழுப்புரம்.

---

### மேற்கு வங்கத்தில்

# பழிவாங்கப்பட்டோருக்கு மீண்டும் வேலை தருக!

## தமிழக அரசு ஊழியர் சங்கத் தீர்மானம்

மதுரை, செப். 22— அகில இந்திய அரசு ஊழியர் சங்கத் தலைவர் தோழர் அரவிந் கோஷால் மற்றும் மேற்கு வங்க அரசு ஊழியர் சங்கத் தலைவர்கள் 11பேரும்எதேச்சாதிகாரமான முறையில் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருப்பதைக் கண்டித்து தமிழ்நாடு அரசு ஊழியர் சங்கத்தின் மதுரை மாவட்ட செயற்குழு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. செயற் குழுக் கூட்டம் நேற்று இங்கு நடைபெற்றது. வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களை மீண்டும் உடனே வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூட்டம் கோரியது.

### வருடாந்திர சம்பள உயர்வு

மாற்றியமைக்கப்பட்ட சம்பள விகிதத்தை அக்கவுண்டன்ட் ஜெனரல் அங்கீகரிக்கும்வரை வருடாந்திர சம்பள உயர்வைப் பெறுவதற்கு அரசாங்கம் விதித்திருக்கும் தடையை அகற்றுமாறும் ஒரு தீர்மானம் கேட்டுக் கொண்டுள்ளது. இந்தத்தடையினுல்பலஊழியர்கள் மாற்றியமைக்கப்பட்ட சம்பள விகிதப்படி அக். 2-ம் தேதி தங்களுடைய முதல் வருடாந்திர சம்பள உயர்வைப் பெற முடியாதிருப்பதையும் அத்தீர்மானம் சுட்டிக் காட்டுகிறது.

மதுரை கலெக்டர் அலுவலகத்தில் சர்வே பிரிவைச் சேர்ந்த ஊழியர்களைச் சீட்டுக் குலுக்கிப் போட்டு இடம் மாற்றும் முறையை நிறுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டும் சேலத்தில் நடைபெறும் அரசு ஊழியர் மாநில மாநாட்டில் கலந்துகொள்ள உதவும் முறையில் நவ 6-ம் தேதியும் நவ 8-ம் தேதியும் விடுமுறையளிக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஊழியர்கள் நியாயமான வீட்டு வாடகை படி பெறும் முறையில் பழனி நகரத்தை முதல்தர நகரசபை ஆக்குமாறும் பழனி நகரில் வேலை செய்வோருக்கு சிறப்பு வீட்டு வாடகை படி அளிக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

### சினிமா நட்சத்திர ஆதிக்கம்

# சோவியத் யூனியனில் கிடையாது!

சென்னை, செப். 22— மிகச்சிறந்த முறையில் சோவியத்சினிமாத்தொழில் துறை உள்ளது. முன்கூட்டியே ஒவ்வொரு சிறிய விவரமும் திட்டமிடப்பட்டு, பின்னர் உற்பத்தி தொடங்கப்படுகிறது.'' என்று நேற்று மாலை மெஹ்பூப் மூவிஸ் அலுவலகத்தில் நடைபெற்ற பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசுகையில் திரு. எம். பி. சீனிவாசன் கூறினர்.

### இஸ்கஸின் கலாச்சாரக் குழு

'சினிமா இசைக் கலைஞர்கள் சங்கம்.' 'தென்னிந்திய திரைப்பட ஊழியர் சம்மேளனம்' ஆகியவற்றின் செயலாளராக இருக்கும் எம். பி. சீனிவாசன் அண்மையில், இஸ்கஸின் கலாசாரக் குழுவொன்றில் உறுப்பினராக சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தார். கல்கத்தா திரைப்பட நடிகையான ருமா குஹாதகூர்த்தா, பம்பாய் சங்கீத டைரக்டரும் பாடலாசிரியருமான பிரேம் தவான் ஆகியோர் அக்குழுவின் மற்ற உறுப்பினர்களாவர்.

### நட்சத்திர ஆதிக்கம் இல்லை

திரைப்படப் பத்திரிகைகளிலிருந்து வந்திருந்த பல்வேறு நிருபர்களின் கேள்விகளுக்குப் பதிலளித்துப் பேசிய சீனிவாசன், சோவியத் நாட்டில் மிகக்குறைந்த சம்பளம்பெறும் ஸ்டூடியோ ஊழியருக்கும், மிக உயர்ந்த ஊதியம் பெறும் கலைஞர்களுக்குமிடையே நிலவும் வருவாய் வேறுபாடு 1:5 என்ற விகிதத்தில்தான் உள்ளது என்று தெரிவித்தார். சில சினிமா நட்சத்திரங்கள் மிகவும் பிரபலமானவர்களாக இருந்தும் சோவியத் யூனியனில் சினிமா நட்சத்திரங்கள் திரைப்படத் துறையில் ஆதிக்கம் வகிப்பதில்லை. ஸ்டூடியோவைச்சேர்ந்த நடிக, நடிகையர் தேர்வுக்குழு, குறிப்பிட்டப் பாத்திரத்திற்கு குறிப்பிட்ட நடிக, நடிகையரின் திறமைகளைப்பற்றி விவாதித்து மதிப்பிடுகிறது; அதன் பின்னர் அக் குழு முடிவுக்கு வருகிறது. நாடக அரங்கு, ஆப்பரா, பாலே, சர்க்கஸ் அரங்கங்களிலிருந்தெல்லாம், புதிய திறமைகளை சோவியத் படத் தயாரிப்பாளர் கண்டுபிடித்து திரைப்படங்களில் அவற்றைப் பயன்படுத்துகின்றனர்.

### படைப்புச் சுதந்திரம்

படைப்புச்சுதந்திரம் பற்றிய

(4-ம் பக்கம் பார்க்க)

# காங்கிரசுக்கு முழுத் தொண்டூழியம் புரியும் பாதையில் வலது கம்யூனிஸ்டுகள்!

(சென்ற இதழ் தொடர்ச்சி)

## இந்திய—சோவியத் ஒப்பந்தம்

வலது கம்யூனிஸ்டுகள் அவர்களுடைய தேசிய ஜனநாயகப் புரட்சியை முழுமையானதாகச் செய்யும் என்று நினைக்கிற மேலும் ஒரு அம்சம், சமாதானம், நட்புறவு, ஒத்துழைப்புக்கான சமீபத்திய இந்திய—சோவியத் ஒப்பந்தமாகும். அவர்களுடைய நகல் அரசியல் தீர்மானத்தின்படி, ''நாட்டின் தேசிய ஜனநாயகப் புரட்சி சக்திகள் மேலும் வளர்ச்சியடைவதற்கு இது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்ததாகும். வர்க்கக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்போது அதனுடைய முக்கியத்துவம் நீண்டகாலத் தன்மை வாய்ந்ததும் அடிப்படையானதுமாகும்''
(அழுத்தம் அவர்களுடையது)

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக் கட்சி இந்த ஒப்பந்தத்தை வரவேற்றதுடன், அதனுடைய உபயோகத்தை, இந்திய அரசாங்கம், பங்களாதேஷ் அரசாங்கத்தை உடனடியாக அங்கீகரித்து அதற்கு அதிக அளவில் கார்மீக சாதன உதவிகள் செய்யப் போகிறதாஎன் பதிலிருந்து தான் நிர்ணயிக்க முடியும் என்றும் கூறியது. அத்துடன் இந்திய அரசாங்கம் யாதேனும் பிற்போக்குக் குழுக்களுக்குள், அல்லது சீனவுக்கு எதிரான சதிநோக்கங்களுக்கு இழுத்துச் செல்லப்படுவதற்கு எதிராக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எச்சரிக்கை செய்தது.

மேலும், இப்படிப்பட்ட ஒப்பந்தங்கள் தாமாகவே நாட்டின் பாதுகாப்பையும் பொருளாதாரத்தையும் உண்மையாக வலுப்படுத்துவதற்கு இட்டுச்செல்லாது. அது பிரதானமாக அதன் உள்நாட்டு வலுவைப் பொருத்திருக்கிறது என்று அழுத்தமாகக் கூறி, மக்கள் தங்களுடைய ஜாக்கிரதைத் தன்மையை அதிகரிக்கும்படியும் ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்காகவும், அரசாங்கத்தின் மக்கள்விரோதக்கொள்கைகளுக்கு எதிராகவும் அவர்களுடைய போராட்டத்தைத் தீவிரப்படுத்தும்படியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மக்களை அறை கூவி அழைத்தது. மேலும், இந்தவிதமான ஒப்பந்தங்கள், சோசலிச முகாமுக்கும், ஏகாதிபத்திய முகாமுக்கும் இடையில் பேரம் பேசுவதற்கான நிலையைப் பலப்படுத்தவும், கோஷ்டி சேராத அயல் நாட்டுக்கொள்கையை வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு விதமாக வியாக்யானம் செய்யவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எடுத்துக் கூறியது.

## உதவிப்படத்தின் மறுபகுதி

மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி இவைகளை யெல்லாம் வற்புறுத்திக் கூறுவது ஏனெனில், புதிதாக விடுதலையடைந்த நாடுகளுக்கு சோஷலிச நாடுகள் அளிக்கும் உதவியை அது எப்போதுமே வரவேற்று வருகிற அதே நேரத்தில், படத்தின் மறுபகுதியைப் பார்ப்பதற்கு அது ஒருபோதும் மறக்கவில்லை. அதன் மறுபகுதி என்னவெனில் இந்த நாடுகளின் ஆளும் முதலாளி வர்க்கங்கள் சோஷலிச நாடுகளின் உதவியை மேலும் ஏகாதிபத்திய நாடுகளுடன் பேரம் செய்யவும், அதன் மூலம் தங்களுடைய நாடுகளை மேலும் மேலும் ஏகாதிபத்தியத்தைச் சார்ந்திருக்கச் செய்யவும் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கின்றன. மேலும் இவைகள் எப்போதுமே சோஷலிஸ்டு நாடுகளின் உதவியை தங்களுடைய சொந்த நாடுகளில் முதலாளித்துவத்தைக் கட்டுவதற்கு உபயோகப் படுத்தி வருகின்றன.

இந்திய—சோவியத் ஒப்பந்தத்திற்குப் பிறகுகூட, இந்திரா காந்தியின் உடனடித் திட்டம் என்ன? பங்களா தேசத்தை அங்கீகரிப்பதல்ல ''பதிலாக'' அந்த ஒப்பந்தத்தின் மூலம் ஏகாதிபத்திய வாதிகளுடைய மனத்தில் ஏதாவது தப்பபிப்ராயம் ஏற்பட்டிருந்தால் அவைகளை அகற்றுவதற்காக வாஷிங்டனுக்கும் மற்ற மேலை நாடுகளின் தலைநகர்களுக்கும் விஜயம் செய்வது சூடான் கம்யூனிஸ்டுகளைப் படுகொலை செய்த நுமெரிக்கு அழைப்பு அனுப்புவது.

மேலும், புதிதாக விடுதலை பெற்ற நாடுகளின் ஆளும் வர்க்கங்களுடைய கம்யூனிஸ்டு எதிர்ப்பு மனோபாவம் பற்றி மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி நன்கு அறிந்திருக்கிறது. இந்த நாடுகளில் கம்யூனிஸ்டுகளும் புரட்சிகர இயக்கமும் ஒடுக்கப்பட்டு, கம்யூனிஸ்டுகள் படுகொலை செய்யப்படும்போதுகூட, இந்த ஆளும் வர்க்கங்கள் சில சோஷலிஸ்டு நாடுகளிலிருந்து உதவி பெற்றுக்கொண்டிருக்கின்றன. இந்தியா உள்பட, இந்தோனேஷியா, பர்மா, பாகிஸ்தான், பங்களாதேஷ், ஈராக் எகிப்து, சிரியா, சூடான், சிலலத்தீன் அமெரிக்க நாடுகளுடைய அனுபவம் இந்த உண்மையை ஊர்ஜிதப் படுத்துகிறது.

## சந்தர்ப்பவாதிகளுக்குச் சந்தர்ப்பம்

சோஷலிஸ்டு நாடுகளில் உற்பத்தி செய்யப்பட்ட குண்டுகளைப் பயன் படுத்தி இந்த நாடுகளில் உள்ள ஆளும் வர்க்கங்கள் கம்யூனிஸ்டுகளைச் சுட்டுக்கொல்லும்போதும். தேசிய ஜனநாயகமும், முதலாளித்வமற்ற பாதையும் மார்க்சிச - லெனினிசத்தில் கொடுமை நிறைந்த கேலிக்கூத்தாகிறது. இந்த விதமான உதவி சீனு சோவியத்யூனியன் ஆகிய இருநாடுகளாலும் கொடுக்கப்பட்டுவருகின்றன என்பதை நாம்ஞாபகத்தில் கொள்ளவேண்டும்.

வலது கம்யூனிஸ்டுகள்-ஒவ்வொரு இடத்திலுமுள்ள திருத்தல் வாதிகள் இதைப்பார்க்க விரும்புவதில்லை. அவர்கள் இந்த ஆளும்வர்க்கங்களுடைய ''ஏகாதிபத்திய

### ''பீப்பிள்ஸ் டெமாக்ரசி'' கட்டுரை

தமிழாக்கம்: சே. ராமசாமி

எதிர்ப்பை'' பாராட்டுகிறார்கள்—உள்நாட்டில் கம்யூனிஸ எதிர்ப்பு மேலோங்கி இருக்கும்போது இந்த ஏகாதிபத்திய எதிர்ப்பின் உறுதி கொஞ்சமும் நிலையற்றது.

பிலாய் உருக்குத் தொழிற்சாலை கட்டுவதற்கு ஒப்பந்தம் ஏற்பட்டபோது, தொழிலாளிவர்க்கச் சர்வாதிகாரத்தின் தேவை இல்லாமலேயே, நேருவின் தலைமையின் கீழ் இந்தியாவில் சோஷலிசத்தை கட்டுவது பற்றி பேசுவதற்கு சில கம்யூனிஸ்டுகளுக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டது, தற்போதைய இந்திய சோவியத் ஒப்பந்தமும், இந்திய ஆளும் வர்க்கங்களின் உறுதியான ஏகாதிபத்திய எதிர்ப்பு, முரணற்ற முற்போக்கு சோஷலிச நாடுகளுடன் வளர்ந்து வரும் உறவுபற்றி நற்சான்றிதழ் வழங்குவதற்கு திருத்தல்வாதிகளுக்கு ஒரு சந்தர்ப்பமாக ஆகியிருக்கிறது.

## சீன எதிர்ப்பு

ஆளும் வர்க்கங்களுக்குத் தொண்டு செய்யும் அதே கொள்கையிலிருந்துதான் வலது கம்யூனிஸ்டுகளின் வளர்ந்துவரும் சீன எதிர்ப்புத் தோன்றுகிறது. உலகில் உள்ள எல்லாத் தீமைகளுக்கும் தோற்றுவாய் சீனுதான் என அவர்கள் விருப்பத்தோடு அதன்மீது குற்றம்சுமத்துகிறார்கள். இந்தக் குருட்டுத்தனமான சீன எதிர்ப்பு எப்போதுமே அவர்களைக் கேலிக்குரிய நிலையில் தள்ளியிருக்கிறது இந்திய—சீன மோதுகையின்போது அவர்கள் குறுகிய தேசீயவாத உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டது ஒருபுறமிருக்க மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி இரு நாடுகளின் நலனுக்காகவும் சமாதானத் தீர்வும், இந்தியா—சீனு உறவும் வேண்டும் என்று அறைகூவல் விட்டபோது வலது கம்யூனிஸ்டுகள்தான் சீனுவுடன் எப்படி உறவு கொள்ளமுடியும் என்று கேட்பதில் முதல் ஆளாக இருந்தார்கள். இன்று ஏகாதிபத்திய ஆதிக்கத்திலுள்ள சகல பத்திரிகைகளும், முதலாளித்துவ வட்டாரங்களும் இன்னும் மற்றவைகளும் சீனுவுடன் உறவை சுமுகமாக்க வேண்டும் என்று கோரிக்கொண்டிருக்கிறார்கள். இந்திய அரசாங்கம்கூட அதைப்பற்றிப் பேச ஆரம்பித்திருக்கிறது.

இதில் சமீபத்திய நிகழ்ச்சி நிக்சன் பீகிங் செல்வதற்கான திட்டம். இது வலது கம்யூனிஸ்டுகளை முற்றிலும் நிலைகுலையச் செய்திருக்கிறது. கம்யூனிஸ்டுகளை விட்டு விடுவோம், எந்த ஏகாதிபத்ய எதிர்ப்பாளனும், எந்த ஜனநாயகவாதியும் இதன்மூலம், கம்யூனிஸத்தைக் கட்டுப்படுத்துவது, சீனுவைப் பகிஸ்காரம் செய்வது, ஆசியாவில் குறிப்பாக, வியட்னுமில் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவது இத்தியாதி கொள்கைகளுக்கு அமெரிக்க ஏகாதிபத்யத்துக்கு ஏற்பட்ட பெரும் தோல்விகளை அது ஒப்புக்கொள்ள நேரிட்டதுபற்றி மகிழ்ச்சியடைவார்கள். நமது வலது கம்யூனிஸ்டு கனவான்கள் அவ்வாறு செய்யவில்லை. அவர்களைப் பொறுத்தவரையில், ''நிக்சன்—மாவோ கூட்டு'' ''சோவியத் யூனியனுக்கு எதிராகச் செய்யப்படுவது மாத்திரமல்ல, அத்துடன் ''உலக ஏகாதிபத்ய எதிர்ப்புச் சக்திகளுக்கு எதிராகவும்'' செய்யப்படுவதாகும். மேலும் அது ''தென் கிழக்கு ஆசியாவிலும் தெற்கு ஆசியாவிலும் அமெரிக்காவும், சீனுவும் செல்வாக்கு மண்டலங்களைப் பிரித்துக்கொள்ளச் செய்யும் முயற்சியுமாகும்.''

## சோஷலிச முகாமின் ஒற்றுமை

தன்னைக் கம்யூனிஸ்டு என்று கூறிக்கொள்கிற எவரேனும், சோவியத் யூனியனையோ அல்லது சீனுவையோ சோஷலிச முகாமிலிருந்து நீக்கிவிட்டு, தற்கால சர்வதேசிய அரசியல்நிலை பற்றிப் புரிந்துகொள்ளவும், தன்னுடைய நாட்டுப் புரட்சியின் யுத்த தந்திரம், போர்த் தந்திரத்தை அல்லது தன்னுடைய கட்சியின் தற்கால அரசியல் கொள்கையை வரையறுக்க இயலுமா? ஆனால் வலது கம்யூனிஸ்டுகள் இந்த வேலையைச் செய்திருக்கிறார்கள்— அதற்குச் சாதாரண காரணம், அவர்களுடைய யுத்த தந்திர, போர்த் தந்திர, அரசியல் கொள்கைகளுக்கு ஒரே ஒரு அளவுகோல்தான் இருக்கிறது—அதாவது, அவை ஆளும் வர்க்கங்களின் நலனுக்குத் தொண்டு செய்பவையாகவும் ஆளும் வர்க்கங்கள் ஒப்புக் கொள்ளத்தக்கவையாகவும் இருக்க வேண்டும்.

ஏகாதிபத்தியவாதிகள் தங்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு, புதிய சாகசங்களை ஆரம்பிக்க நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிற தருணத்தில், ஏகாதிபத்யத்தின் மீது இறுதி தாக்குதல் தொடுப்பதற்கு சோசலிச முகாம், உலக கம்யூனிஸ்டு இயக்கம் இவைகளின் இவைகளின் ஒற்றுமை அவசரமாகத் தேவைப்படுகிற இத்தருணத்தில், தற்சமயம் தவறான கொள்கைகளை பின்பற்றிக் கொண்டிருக்கிற சோவியத், சீனு ஆகிய இரு பெரும் கம்யூனிஸ்டு கட்சிகளும் தங்கள் கொள்கைகளை மறு பரிசீலனை செய்து ஒன்றுசேர வேண்டுமென்று ஒவ்வொரு கம்யூனிஸ்டும் ஆவலுடன் விரும்பிக் கொண்டிருக்கும் சமயத்தில் வலது கம்யூனிஸ்டுகள், ஒரே வரியில் சோசலிஸ்டு சீனுவைக் கைகழுவி விடுகின்றனர். அதை ஏகாதிபத்ய எதிர்ப்பு போராட்டங்களை அடக்குகிற செல்வாக்கு மண்டலங்களைப் பெறவிரும்புகிற ஏகாதிபத்ய நாடாக மாற்றுகிறார்கள்.

## ஆளும் வர்க்கத்திற்கு வலதுகளின் தொண்டு!

சோவியத் யூனியன், மக்கள் சீனம் ஆகிய இருநாடுகளும், ஒன்றுக்கு எதிராக மற்றொன்றுஏகாதிபத்யதுடன் கூட்டு சேர்ந்து விட்டதாக குற்றம் சாட்டிக் கொண்டிருக்கின்றன. இந்த இருதரப்பினரும் கூறும் குற்றச்சாட்டை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சி எப்பொழுதுமே ஏற்றுக் கொண்டதில்லை. வலது கம்யூனிஸ்ட் கட்சி எப்பொழுதுமே ஒரு தரப்புக் கருத்தை மாத்திரமே ஆதரித்து எதிரொலித்து வந்திருக்கிறது. அது சோவியத் யூனியன் மீது அதற்குள்ள எவ்வித வசுவாசத்தின் காரணமாக அல்ல, மாருக, இந்திய ஆளும் வர்க்கங்களுக்கு வலது கம்யூனிஸ்டுகள் தொண்டு செய்து வருவதன் காரணமாகவே அப்படி எதிரொலித்து வந்திருக்கிறார்கள்.

அவர்கள் ஆளும் வர்க்கங்களுக்கு வெட்கம் கெட்ட முறையில் சேவை செய்து வருவதையும், காங்கிரஸ் எதிர்ப்பு ஜனநாயக முன்னணியிலிருந்து விலகி துரோகத்தனமாக, காங்கிரஸ் தலைமை வகிக்கும் மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி எதிர்ப்பு அணிக்குச் சென்று விட்டதையும் மூடி மறைப்பதற்காக வலது கம்யூனிஸ்டுகள் தங்கள் தீர்மானத்தில் மார்க்சிஸ்டு கம்யூனிஸ்ட் கட்சி மீது அவதூறான குற்றச்சாட்டுக்களைச் சுமத்த முயற்சி செய்கிறார்கள். அதாவது, மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டுகட்சியின் தலைமை அதனுடைய பழைய, செக்டேரியன், சீர்குலைவுப் பாதையையும், அதனுடைய அரசியல் கொலை பயங்கரவாதப் பாதையையும் தொடர்ந்து பின்பற்றி வருகிறது'' என்று கூறுகின்றனர்.

கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் ஜனநாயக முன்னணியை உடைத்தது எது? மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் செக்டேரியன் கொள்கையா அல்லது இந்திராகாந்தி காங்கிரசை பின்பற்றி, எழுச்சியடைந்து வரும் தொழிலாளர்கள் விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்களின் இயக்கங்களிலிருந்து சொத்துரிமை ஆதிக்கம் பெற்ற கும்பலின் நலன்களைப் பாதுகாப்பதற்காக காங்கிரசுக்கு உதவி செய்யவேண்டுமென்பதில் வலது கம்யூனிஸ்டுக் கட்சிக்கு இருந்து வருகிற தீவிரமான ஆவலா?

## யார் சீர்குலைவுவாதிகள்?

மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டுக்கட்சியை எதிர்த்துப் போராடவேண்டும் என்பதிலும் காங்கிரசுக்குச் சேவை செய்யவேண்டுமென்பதிலும் அவர்களுக்கிருந்துவருகிற ஆவல் காரணமாக மேற்குவங்க காங்கிரஸ் அல்லாத அமைச்சரவையை நிறுவ ஏதுவாகும் பொருட்டு வலது கம்யூனிஸ்டு கட்சிக்கு உள்துறை இலாகாவைக் கொடுப்பதாக மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி கூறியதைக்கூட வலது கம்யூனிஸ்டுகட்சி நிராகரித்தது. மாருக, அவர்கள் சிறுபான்மையான காங்கிரஸ் கட்சி பதவிக்கு வருவதை ஏதுவாக்கும் பொருட்டு, சிண்டிகேட், ஜனசங்கம், முஸ்லிம்லீக், இன்னும் மற்ற கட்சிகளோடு கூட்டுச் சேர்ந்தார்கள். அதன் பிறகு சட்டமன்றத்தைக்கலைத்து அந்த மாநிலத்தில் ஜனுதிபதி ஆட்சியைத் திணிப்பதற்கு அவர்கள் தங்களுடைய ஆதரவை நல்கினுர்கள். யார் பிளவு வாதி? மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியா—அல்லது வலது கம்யூனிஸ்டு கட்சியா?

மக்களது ஒற்றுமையை உடைத்துக் கொண்டிருப்பது யார்? பல்வேறு கட்சிகளிடையே பல்வேறு கருத்து வேற்றுமைகள் இருந்த போதிலும், தடுப்புக் காவல் சட்டம், உள்நாட்டுப்பாதுகாப்புப் பராமரிப் சட்டம் போன்ற அடக்கு முறைச் சட்டங்களுக்கு எதிராக கூட்டு நடவடிக்கைக்கு வருமாறு: அறைகூவல் விடுத்த மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியா அல்லது இந்த வேண்டுகோளை நிராகரித்ததோடு, தன்னுடைய நகல் அரசியல் தீர்மானத்தில் இந்தச் சட்டவிரோதமான சட்டங்களை எதிர்த்துப்போராடுவதற்கு தன்னுடைய சொந்தக் கட்சிக்குக்கூட அறைகூவல் விடாத வலது கம்யூனிஸ்டு கட்சியா!

யார் பிளவு வாதிகள்? அரசாங்கம் மக்கள் மீது தாங்கமுடியாத பொருளாதார சுமைகளைச் சுமத்திக் கொண்டு வருவதிலிருந்து மக்களைப் பாதுகாப்பதற்காக கூட்டு நடவடிக்கைகளுக்கு வருமாறு: மீண்டும் மீண்டும் அறைகூவல் விட்டுக்கொண்டிருக்கிற மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியா அல்லது மத்திய ரிசர்வ் போலீஸ், துர்க்காபூர் தொழிலாளர்களை அடித்துபணிய வைக்க தங்கள் தலைவர்கள் உடன் சென்ற மாநில அரசாங்க ஊழியர்கள் போராட்டத்தில், தங்கள் பிரதிநிதிகளால்கூட கையெழுத்திடப்பட்டிருந்த மத்திய தொழிற் சங்கங்களின் கூட்டுப்பிரகடனத்திலிருந்து பின் வாங்கிச் சென்றது போன்ற மற்றும் ஏராளமான நடவடிக்கைகளின் மூலம் சீர்குலைவு செய்ய முயற்சி செய்த வலது கம்யூனிஸ்டுகளா?

## கொலைக்குக் கூட்டாளி யார்?

கொலை, பலாத்காரத்துக்கு இடங்கொடுத்துக் கொண்டிருப்பது யார்? மேற்கு வங்க மாநிலத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கிற தனிநபர் அரசியல் கொலைகளையும் வெகுஜனக் கொலைகளையும் காங்கிரசும் போலீசும் கூட்டாகச் சேர்ந்துதான் செய்து வருகிறார்கள் என்று மார்க்சிஸ்ட்டு கம்யூனிஸ்டு கட்சி குற்றம் சாட்டியதை ஆரம்பத்தில் சந்தேகித்தவர்கள் கூட இப்பொழுது அக் குற்றச்சாட்டு உண்மையென உணர்ந்து கொண்டார்கள். ஆனால், வலது கம்யூனிஸ்டுகள் மானங்கெட்ட முறையில் காங்கிரசின் அடிமையாக மாறிவிட்டபடியால், அதற்கு உதவி செய்வதற்காக, ''கொலைகார அரசியல், பயங்கரவாதம்'' என்ற குற்றச்சாட்டுகளை மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் மீது சாட்டுகிறார்கள்.

மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி சீனக் கம்யூனிஸ்டு கட்சிக்கு தாசனுக இருக்கிறதென்றும், சீனக்கட்சியின் கட்டளைப்படிதான் நாம் கட்சியைப்பிளவு படுத்தினோம் என்றும் கூறுவது, வலதுகம்யூனிஸ்டுகளுக்கு விருப்பமான பொழுதுபோக்கு. கட்சிக்குள்ளேயே பதினைந்து ஆண்டுகள் போராடிய பிறகு— சோவியத்—சீன வேற்றுமைகள் தோன்றுவதற்கு நீண்டகாலத்துக்கு முன்னமேயே அந்தப்போராட்டம் ஆரம்பித்தது—இன்று அவர்கள் முன் வைத்திருக்கிற அதே திட்டவட்டமான திருத்தல் வாதக் கொள்கையை எதிர்த்துத்தான் இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி பிளவுபட்டது. விவாதத்திற்காக கட்சியின் நகல் திட்டம் பிரசுரிக்கப்பட்டபோது, இந்திய நிலையைப் பற்றிய சோவியத் கட்சி, சீனக் கட்சி ஆகிய இரு கட்சிகளின் மதிப்பீட்டிலிருந்து நாங்கள் வேறுபடுகிறோம் என்பதை பகிரங்கமாகவே தெளிவு படுத்தினோம். அன்றிலிருந்து அடிக்கடி, இந்த இருகட்சிகளும் எடுக்கும் நிலையிலிருந்து எங்கள் கட்சி தன்னை வேறுபடுத்திக் காட்டி வந்திருக்கிறது—தேவையான அடக்கத்தோடு, சோசலிசத்துக்கும், சோஷலிச அமைப்புக்கும் எவ்வகையிலும் ஊறு செய்யாமல். கோட்பாடு அடிப்படையில் சர்வதேச கம்யூனிஸ்டுஇயக்கம் மீண்டும் ஒற்றுமையடைய வேண்டுமென்ற தீவிரமான ஆவலுடன் இதைச் செய்து கொண்டு வந்திருக்கிறது.

## முதலாளிகளின் ஆதிக்கத்தில் வலதுகள்

மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி பல ஆண்டுகளாக, இந்தியத் திருத்தல் வாதிகள் எடுக்கும் கொள்கை நிலை பற்றி, இக்கொள்கை நிலைகளால் தொழிலாளி வர்க்கத்துக்கும், உழைக்கும் மக்களின் இயக்கங்களுக்கும், ஜனநாயக இயக்கங்களுக்கும் ஏற்படும் துயரமானவிளைவுகள் பற்றியும் கோட்பாடு ரீதியான தத்துவார்த்த—அரசியல் விமர்சனம் செய்து வந்திருக்கிறது. இந்த விமர்சனங்களுக்கு அவர்கள் ஒருபோதும் பதில் கூற இயலவில்லை. உண்மையில், அவர்கள் எடுக்கும் ஒவ்வொரு நிலையும், மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சி அவர்களைப் பற்றிக்கூறியவைகளை உறுதிப் படுத்துகின்றன — அதாவது, வலது கம்யூனிஸ்டுகள் ஆளும் வர்க்கங்களுடன் வர்க்க சமரசப் பாதையைக் கடைப் பிடித்துவருகிறார்கள் ''தேசிய ஜனநாயகம்'' என்ற பெயரால் ஜனநாயகப் புரட்சியில் அவர்கள் முதலாளிகளின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். எனவே தான், ''பிளவு வாதிகள்'' ''கொலைகார அரசியல்'' இன்னும் இது போன்ற அவர்களுடைய துருப்பிடித்த அவதூறுகளை மிக விஷத்தனமாக வலது கம்யூனிஸ்டுகள் திரும்பத் திரும்பக் கூறி வருகிறார்கள். இப்படிப்பட்ட அவதூறுகள் மூலம் அவர்களைப் பின்பற்றி வருபவர்களைக்கூட நீண்ட நாட்களுக்குப் போஷிக்க முடியுமா என்பது சந்தேகம்.

வலது கம்யூனிஸ்டுகளின் சீர்குலைவு வேலைகளால் ஜனநாயக ஒற்றுமைக்கு ஏற்கனவே ஏற்பட்டிருக்கும் சேதம் எல்லோருக்கும் தெளிவாகத் தெரிகிறது. 1971 மார்ச் மாதம் நடைபெற்ற தேர்தலில் பாரம்பரியமான இடதுசாரிகளுக்கு ஏற்பட்ட பின்னிடைவு மறுபடியும் இதைக் காட்டியிருக்கிறது. தனக்குப் பின்னுல் வெகு ஜனங்களின் கட்டளை இருக்கிறதென்று நினைக்கும் இந்திரா காந்தியின் அரசாங்கம், மக்களின் உயிரின் மீதும் வாழ்க்கையின் மீதும் பிரம்மாண்டமான தாக்குதலை ஏற்கனவே துவக்கி விட்டது அவர்களுக்கெதிராக கட்டுமிராண்டித்தனமான அடக்கு முறையை துவக்கிவிட்டது. அது விரும்புகிற போதெல்லாம், பாராளுமன்ற ஜனநாயக நாடகங் கூட இல்லாமல் நடத்திச்செல்ல விரும்புகிறது. ஜனநாயக சக்திகள் ஒன்றுபடுவதன் மூலம் மட்டுமே ஆளும் வர்க்கங்களின் இந்தத் தாக்குதலிலிருந்து உழைக்கும் மக்களைப் பாதுகாக்க இயலும். இப்படிப்பட்ட கட்டத்தில் தான், வலது கம்யூனிஸ்டு கட்சி அதனுடைய ஜனநாயக ஒற்றுமைக்குத் துரோகம் செய்யும் கொள்கையைத் தொடர்ந்து பின்பற்றுவதற்கு உறுதிப் படுத்திக் கொண்டு நீண்டகாலமாகத் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் நமது மக்களை காங்கிரஸ் ஆட்சியாளர்களின் பணயக் கைதிகளாக ஒப்படைக்க தயார் செய்து கொண்டிருக்கிறது

இதுதான் அதனுடைய நகல் அரசியல் தீர்மானத்தின் பொருள். இப்போது கேரளாவில் காங்கிரஸின் கோரிக்கைகளுக்கு உடன்பட்டுப் போவதற்கான அவர்களுடைய சரணுகதியான சமரசம் செய்து கொள்ளும் நடைமுறையும், பீகார், மேற்கு வங்கம், ஆந்திரப் பிரதேசம், இவைகளில் போல, ஆளும் வர்க்கங்களுக்கு முழுமையாகத் தொண்டுபுரியும் கொள்கையை முழுமையாக ஏற்றுக் கொள்ளத் தயாரில்லாத நிலையில் கட்சிக்குள் இருப்பவர்களை ஒடுக்குகிற நடைமுறையும் இந்தப் பாதையைத் தான் வலது கம்யூனிஸ்டுத் தலைவர்கள் தொடர்ந்து பின்பற்ற தீர்மானித்திருக்கிறார்கள் என்பதைக் காட்டுகின்றன.

— முற்றும் —

---

# நமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| அமைப்புச் சட்டம் | ... 0 | 25 |
| கட்சித் திட்டம் | ... 1 | 00 |
| கொள்கை அறிக்கை | ... 0 | 20 |
| இன்றைய அரசியல் நிலைமை | ... 0 | 40 |
| இந்திய அரசும் மார்க்சிஸ்ட் கட்சியும் | ... 0 | 10 |
| இந்தியக் கம். கட்சிக்கும், சீனக் கம். கட்சிக்குமிடையே உள்ள வேறுபாடு | ... 0 | 40 |
| செக்கோஸ்லாவாக்கியாவில் நடந்தது என்ன? | ... 0 | 25 |
| இடதுசாரி திரிபு ஏன்? மத்தியக் கமிட்டியின் ஆய்வுரை | ... 0 | 30 |
| இடதுசாரி திரிபு அல்லது இடதுசாரி சந்தர்ப்பவாதம் | ... 0 | 40 |
| வலதுசாரிகளின் தடுமாற்றம் | ... 0 | 15 |
| குட்டி முன்னணியின் துரோக வரலாறு | ... 0 | 20 |
| புதிய ஜனநாயகம் | ... 0 | 50 |
| லெனின் நூற்றாண்டுகள் —ரணதிவே | ... 0 | 30 |
| ஹோ - சி - மின் | ... 0 | 25 |
| இ. எம். எஸ். வாழ்க்கை வரலாறு | ... 0 | 50 |
| நான் என்றும் மக்கள் ஊழியனே ஏ. கே. ஜி. சுயசரிதம் | ... 1 | 50 |
| தி. மு. க அரசும் விவசாயிகளும் | ... 0 | 10 |
| மொழிச் சிக்கலைத் தீர்க்கும் வழி | ... 0 | 10 |
| மொழிப் பிரச்சனையில் மார்க்சிஸ்ட் நிலை | ... 0 | 15 |
| சிவசேனையும் காங்கிரசும் | ... 0 | 10 |
| ஆந்திராவில் காங்கிரஸ் வெறியாட்டம் | ... 0 | 05 |
| தமிழ் இலக்கியம் கூறும் வர்க்க சமுதாயம் | ... 0 | 80 |
| செவ்வானம் — நாடகம் | ... 1 | 00 |
| ஹோ - சி - மின் படம் | ... 0 | 15 |
| பி. ராமமூர்த்தி படம் | ... 0 | 15 |
| வலது கம்யூனிஸ்டுகள் இண்டிகேட்டின் கைப்பாவை — சுந்தரய்யா | ... 0 | 10 |
| அரசியல் தீர்மானம் | ... 0 | 30 |
| கடவுள் உண்டா? இல்லையா? | ... 0 | 10 |
| குத்தகை பதிவுச் சட்டம் | ... 0 | 25 |
| காவேரி, நம்ம காவேரி | ... 0 | 15 |
| குரங்கிலிருந்து மனிதன் தோன்றிய வரலாறு — ஏங்கெல்ஸ் | ... 0 | 25 |
| நடைமுறையைப் பற்றி — மா-சே-துங் | ... 0 | 30 |
| குடும்பப் பென்ஷன் (மோசடி) திட்டம் | ... 0 | 10 |
| மேற்கு வங்கப் படுகொலை — ஜோதிபாசு | ... 0 | 10 |
| தி. மு. அரசின் முதலாளித்துவ ஆதரவு கொள்கை | ... 0 | 05 |
| 71 - தேர்தல் படிப்பினைகள் | ... 0 | 10 |

........................ கிடைக்குமிடம் ........................

**இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)**
தமிழ் மாநிலக் குழு
13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1.

---

## பட்டு நெசவுத் தொழிலாளர் போராட்டத்திற்கு பாங்கு ஊழியர் சங்கம் ஆதரவு!

கும்பகோணம், செப். 23 — கும்பகோணம், பாபநாசம் தாலுகாக்களில் 15,000க்கும் மேற்பட்ட பட்டு நெசவுத் தொழிலாளிகள் கூலி உயர்வு, குறைந்தபட்ச கூலி நிர்ணயம் ஆகிய கோரிக்கைகளுக்காக செப். 10 முதல் நடத்தி வரும் வேலை நிறுத்தப் போராட்டத்துக்கு நகர பாங்கு சங்கமும், எல். ஐ. சி. ஊழியர்கள் சங்கமும், ஆதரவு தெரிவித்துள்ளது.

பட்டு நெசவுத் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ஏற்கக் கோரியும், கைது செய்யப்பட்ட நெசவுத் தொழிலாளர்களை விடுதலை செய்யக் கோரியும், தஞ்சை மாவட்ட வங்கித் தொழிலாளர் சங்கத் தலைவர் அறிக்கை விடுத்துள்ளார்.

## நெய்வேலியில் சி ஐ டி. யூ. வாரம்

நெய்வேலி, செப். 23— நெய்வேலியில் சி. ஐ டி. யூ. வாரத்தை செப். 13-ல் தோழர் ஆர். உமாநாத் தொடங்கிவைத்தார். பொறியாளர் கழக அரங்கில், என். எல். சி. ஊழியர் சங்கம் ஏற்பாடு செய்திருந்த கருத்தரங்கு கட்டிடத்தில் கலந்து கொண்டு அவர் பேசினுர்.

பன்னர் மாலை 6-மணிக்கு திரு வி. க. திடலில் லிக்னைட் மைன்ஸ் லேபர் யூனியன் சார்பில் நடந்த பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினுர்.

---

## அக்டோபர் மாதத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பொதுக்கூட்ட நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| அக்டோபர் | 1 | திண்டுக்கல் |
| ,, | 2 | கோவை மாவட்டம் |
| ,, | 3 | ,, ,, |
| ,, | 4 | தர்மபுரி மாவட்டம் |
| ,, | 5 | சேலம் மாவட்டம் |
| ,, | 6 | வட ஆற்காடு மாவட்டம் |
| ,, | 7 | தஞ்சை மாவட்டம் |
| ,, | 8 | ,, ,, |
| ,, | 9 | திருச்சி மாவட்டம் |
| ,, | 10 | தென்னுற்காடு மாவட்டம் |
| ,; | 11 | மதுரை மாவட்டம் |
| ,, | 12 | ,, ,, |
| ,, | 13 | கேரளம் |
| ,, | 14 | ,, |
| ,, | 15 | குமரி மாவட்டம் |
| ,, | 16 | நெல்லை மாவட்டம் |
| ,, | 17 | ராமநாதபுரம் மாவட்டம் |

# கண்ணோட்டம்

## தங்கக் கடத்தல் ரூ. 400 கோடி

### பிடித்ததோ அரைக்கோடி

சுயராஜ்யம் வந்தால் பத்தாது: சுகராஜ்யம் வர வேண்டாமா? —என்று சுதந்திரப் போராட்டத்தில் குதித்து சொல்லொணு துன்ப துயரங்களை அனுபவித்த மக்கள் கேட்டார்கள்.

அதற்கு ஆளவந்த காங்கிரஸ் தலைவர்கள் அந்த மக்களைப் பார்த்து, 'வாயைச் சுருக்குங்கள்! வயிற்றை இறுக்குங்கள்! ஓயாமல் உழையுங்கள்! தியாகம் செய்யுங்கள்! பெருக்குங்கள்! தொழில் புரட்சியும் தோள்மேல் கை போட்டு முன்னேறட்டும் அப்புறம் பார்! மூன்று முழ இலைபோட்டு முப்பதுவகை காய்கறிகள் வைத்து — அல்வா...லட்டு...அப்பளம் பாயாசத்துடன்...பார், பார்! ஜோர் ஜோர்!...''—என்று நாக்கிலே நீர்சொட்ட நம்பிக்கையைத் தூவினர்கள்.

மக்களின் வரிப்பணத்திலும் வட்டிக்கு வாங்கிய கடன் பணத்திலும் பல்லாயிரம் கோடி ரூபாய்த்திட்டங்கள் தீட்டி—அணைகளையும் ஆலைகளையும் கட்டி முடித்த பின்னே—உழவும் தொழிலும் ஓங்கி வளர்ந்த பின்னே ......!

திட்டங்களால் ஆன செல்வமெலாம் எங்கே போயிற்று? ஏழை எளிய உழைப்பாளி மக்களுக்கும் மத்யமர் ஊழியர்களுக்கும் சம்பள உயர்வு ரூபத்தில் போயிற்றா? பஞ்சப்படி உயர்வு வடிவத்தில் போயிற்றா? போனஸ் உயர்வு உருவத்தில் போயிற்றா? இல்லை,

எந்த வகையிலும் பாட்டாளி மக்களின் குடிசைகளுக்குப் பாயாதபடி இரும்புக்கர இராணுவத்தை ஏவி தடுத்து விட்டு... அப்புறம்......

அத்தனை செல்வமும் பணத்திமிங்கிலங்களின் பங்களாக்களுக்குள்—பாதாள அறைகளுக்குள்ளே பாயும்படி வாய்க்கால வெட்டிவிட்டு ... ஆம், வாய்க்கால் வெட்டி விட்டு...அப்புறம்...

விளைவு என்ன? பணக்காரர்கள் கோடீஸ்வரர்கள் ஆனர்கள்! ஏழை மக்கள் பாப்பர்களானர்கள்; பண்டாரங்களாகப் போனர்கள்!

ஆமாம்! திட்டங்களில் திரண்ட செல்வமெலாம் கள்ள நோட்டுகளாய், கறுப்புப் பணக்குவியல்களாய், கடத்தல் தங்கக் கட்டிகளாய், சீமான்களின் மாளிகைகளிலே சேமித்து கிடக்கிறது!

வெளிச்சம் தெரிந்த வெள்ளைப் பணம் பல்லாயிரம் கோடி இருக்க இருட்டில் கிடக்கும் கறுப்புப் பணம் ரூ 5,000 கோடி என்று ஒரு தகவல்! இல்லை, 10 ஆயிரம் கோடி என்று இன்னொரு தகவல்!

இந்தக் கறுப்புப் பணத்தை என்ன செய்கிறர்கள்?

கறுப்புப் பண வேட்டையாடும் அதிகாரிகளை, இந்தக் கறுப்புப் பணத்திலேயே அடிக்கிற அடியில் அந்த அதிகாரிகளையும் கறுப்புப் பணக்காரர்களாய் ஆக்கிவிடுகிறர்கள்! அப்புறம்.....

அப்புறம் என்ன? அரசாங்க இலாகா தலைவர்களின் தயவிலும் கறுப்புப் பண அபிஷேகம் நடைபெறும்; அவர்களும் கறுப்புப் பணக்காரர்களாகி, கறுப்புப் பணக் கும்பல் காட்டிய இடத்தில் கைச்சாத்திடுகிறர்கள்! அப்புறம்...

அமைச்சர் பெருமக்களுக்கும் ஆளும் கட்சிப் பிரமுகர்களுக்கும் திருமணவிழா வரும்; தேரோட்டு விழா வரும்! பாராட்டுவிழா வரும்! பிறந்த தின விழாவரும்... இப்படி ஏதாவது ஒரு விழா, அடுத்தடுத்து வந்து கொண்டே இருக்கும். அவ்விழாக்களின் போதுதான், இந்தக் கறுப்புப்பணமெல்லாம் மொய்யாக, முறையாக, நன்கொடையாக, அன்பளிப்பாக, பொன்னுடையாக, பொற்கிழிகளாக, வைர வாளாக, தேர்தல் நிதியாக...மற்றும் அந்த நிதி, இந்த நிதி, சங்க நிதி, பதும நிதி...என்று எத்தனையோ நிதிகளாக பொற்காசுகள் பொழிந்தவண்ணமிருக்கும். அப்புறம் என்ன? கோழிகள் கூடைக்குள்ளே அமுக்கப்பட்டு விடுகின்றன. சத்தம்? சத்தம் ஏது? எல்லாம் கப்சிப்! கறுப்புப் பணத்தைப் பிடிக்க வேண்டிய அரசு இயந்திரம், அச்சு முறிந்து போய், ஆரக்கால்களும் கழன்று போய்க் கிடக்கும்.

கறுப்புப்பணம் சும்மா இருக்காது. இருக்காது. சுழல ஆரம்பிக்கும்.

வீடுகளாய் வாங்கினால் ஒரு நாள் சிகப்பன் வருவான். 'உனக்கு எதற்கு ஓராயிரம் வீடு?''—என்று கேட்பான்.

கண்ணுக்கெட்டிய தூரம் வரை காவிரி பாய் நிலமாய் வாங்கிப் போட்டால், அப்போதும் சிகப்பன் கேட்பான், ' உனக்கு வேண்டியது 6 அடி நீளம் 3 அடி அகலம்...... 4 அடி ஆழம் தானே!......எதற்கு ஏழாயிரம், எட்டாயிரம் ஏக்கர்?''—என்று

ஆகவே, கறுப்புப் பணத்தை அவற்றிலே சுழல விட்டால் ஆபத்து! ஆதலால்.....

கைக்குள்ளே அடங்கனும்! கமுக்கமாகவும் மறைக்கணும்! என்றும் மதிப்புள்ளதாக இருக்கனும்! அது எது? அது தான் தங்கம்!

ஆம்! தங்கமே தான்! ஊரை அடிச்ச பணம் இருக்கவே இருக்கிறது! உலையிலே போட்ட பணம் இருக்கவே இருக்கிறது! ஆகவே, வாங்கு தங்கத்தை! என்ன விலையானாலும் சரி''—என்று கறுப்புப் பணமூட்டைகள் கடற்கரைகளில் தவங்கிடக்கின்றன.

என்ன விலை கொடுத்தும் தங்கம் வாங்க இந்தியாவிலே ஆள் இருப்பதினால்தான்......எல்லா நாட்டுத் தங்கமும் இந்தியாவுக்குள் பாய்ந்து கொண்டிருக்கிறது. அதனால் தான் ஒரு சவரனுக்கு சர்வதேச விலை எவ்வளவோ, அதை விட 3 மடங்கு, 4மடங்கு அதிகமாக—ரூ. 200க்கு மேலும் கூட—இந்தியாவில் விற்கிறது. அவ்வளவு கிராக்கி! அதாவது, அவ்வளவு இருட்டுப்பணம் இந்த "சத்திய மேவ ஜயதே" "வாய்மையே வெல்லும்"—நாட்டில் குவிந்து கிடக்கிறது.

இப்படி ஆண்டுதோறும் 400 கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கமும், மற்றுமுள்ள விலை உயர்ந்த பொருள்களும் வெளிநாடுகளிலிருந்து இந்தியாவுக்குள் கடத்தப் படுகிறதாம்.

இந்த 400 கோடி கடத்தலில், இந்திரா அரசின் வீராதி வீரர்கள், சுங்க வேட்டையாடும் சூராதி சூரர்கள் எவ்வளவு பிடித்தார்கள் தெரியுமா? அரைக்கோடி தானும்! அதாவது 800 பங்கு கடத்தலில் 1 பங்கை "லபக்" கென்று பிடித்துவிட்டார்கள்!

இந்த விபரம் எங்கே கிடைத்தது என்று கேட்கிறீர்களா? நன்முகக் கேளுங்கள்.

இது, புதுடில்லி கொடுத்த புள்ளி விவரம். இந்த ஆண்டு ஜூலை மாதத்திலே—30-ம் தேதியிலே—மக்கள் சபைக் கூடடத்திலே— இந்திய அரசின் இராஜாங்க மந்திரி திரு கே. ஆர். கணேஷ் அறிவித்த புள்ளி விபரம்.

அதாவது 400 கோடி கடத்தலில், சிக்கிய அரைக் கோடி போக— மீதமுள்ள ரூ. 399½ கோடி மதிப்புள்ள தங்கம் இந்தியாவுகுள் ஏகிவிட்டது.

கங்கையும் காவிரியும் இணையுங்கள் என்ருல், காசுக்கு எங்கே போவது?

ஆஸ்பத்திரி, பள்ளிக்கூடம், அடுக்குமாடி வீடுகள் கட்டிக்கொடுங்கள் என்ருல், பணத்திற்கு எங்கே போவது?

ஆக்க வேலைகள் ஆயிரம் நடத்தி வேலை வாய்ப்புக்கு ஊக்கமளியுங்கள் என்ருல், வரி வருமானம் போதாதே!

வேலையில்லாதவர்களுக்கு, வேலை கிடைக்கும்வரை, உதவித் தொகை தாருங்கள் என்ருல், எவன் குதிரில் கொட்டிக் கிடக்கிறது?

இப்படி எதற்கெடுத்தாலும், பணத்திற்கு எங்கே போவது என்று பஞ்சப் பாட்டுப் பாடும் அமைச்சர் பெருமக்களே! ஆளும் வர்க்க ஊதுகுழல்களே!

கட்டி கட்டியாய் பெட்டியாய் வரும் கடத்தல் தங்கத்தைப் பற்றி ஒருகணமாவது சிந்தித்தீர்களா?

கடத்தல் பேர் வழிகளை வேட்டையாட வில்லும் அம்புமாய்க் கிளம்ப வேண்டாம்.

கடத்தல் தங்கம்! தொழிலாளி வீட்டில் இருக்காது; விவசாயி குடிசையில் இருக்காது; போலீஸ்காரர்கள், சிப்பாய்கள், அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள், மூளை உழைப்பாளர்கள், நடுத்தரவர்க்கத்தார், சிறு முதலாளிகள், வியாபாரிகள்......இவர்களிடமெல்லாம்இருக்காது.

பெருங்கொண்ட திமிங்கிலங்களிடம் தான் இருக்கும். அவர்களது தொப்பையில் ஆக்கர் போட்டால், கட்டித் தங்கங்கள் கொட்டி விடும்.

அவர்களை எங்கும் தேட வேண்டாம்! அமைச்சர்களை முதல் வரிசையில் நின்று வரவேற்கும் கூட்டத்தாரில், இந்தத் தொந்தி தொப்பைகளும் இருக்கும் அந்த போட்டோ படத்தைப் பார்த்தாலே, கறுப்புப்பணத் திமிங்கிலத்தின்—கடத்தல் தங்க பூதங்களின் முகவரி பளிச்சௌத் தெரியுமே!

—ஐ. மா. பா.

# அரசுப் போக்குவரத்தில் ஊழல் மலிந்திருப்பதேன்?

## கே. எம். அரிபட் அறிக்கை!

சென்னை, செப். 24—

**அனுபவம் இல்லாதவர்களுக்கு வேண்டியவர்கள் என்பதற்காக உயர் பதவிகள் அளிப்பதும், ஊழியர்களின் கோரிக்கைகளை உதாசீனப்படுத்துவதும் ஆட்குறைப்பு அபாயமும்தான் அரசுப்போக்குவரத்தில் அதிருப்தியும் ஊழலும் வளருவதற்குக் காரணம்என்று, பெரும்பான்மைத் தொழிலாளர்களின் ஆதரவு பெற்ற செங்கொடிச் சங்கமான, தமிழ்நாடு அரசுப் போக்குவரத்து ஊழியர் சங்கத்தின் பொதுச்செயலாளர் தோழர் கே. எம். அரிபட் அறிக்கை விடுத்துள்ளார். அறிக்கையின் விபரம் வருமாறு:—**

ஊக்க போனஸ் திட்டத்தில் மாற்றம் கொண்டு வரப்போவதாக அமைச்சர் அறிவித்துள்ளார். உண்மையில் இது ஷிப்டு அட்டெண்டன்ஸ் போன்ற சில்லறைச் சலுகைகளைப் பறிக்கும் சதித் திட்டம் என்றே கருதுகிறேம். எக்காரணம் கொண்டும் இப்போது ஊழியர்கள் பெறும் சலுகைகளைப் பறிக்கக்கூடாது. அப்படி ஒரு நிலைமை ஏற்படுமானல் தொழிலாளர்கள் நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவர். மேலும் அமைச்சர் இப்போது அறிவிக்கும் திட்டமும் அந்தந்த மாத சில்லறைச் சலுகையாகவே கருதப்பட வேண்டும். ஏற்கனவே வழங்கப்பட்டுவரும் இத்தகைய சலுகைகளையும் அந்தந்த மாதமே வழங்க வேண்டும் என்று நீண்ட நாட்களாகக் கோரி வருகிறேம்.

### 20 சதவீத போனஸ்

போனஸ் சட்டப்படி, 20 சதவிகித போனஸ் வழங்கவேண்டும். கடந்த 3 வருடங்களாக போனஸ் சட்டப்படி போனஸ் வேண்டுமென்று கொடுத்த மனுக்களுக்கும், நடத்திய போராட்டங்களுக்கும் அமைச்சர் மவுனமாக இருப்பது கண்டிக்கத்தக்கது; வேதனைக்குரியது.

### ஆட்குறைப்பு அபாயம்

புதிய திட்டம் என்ற பெயரில் டிரைவரே கண்டக்டர் வேலையையும் சேர்த்து செய்ய திட்டமிட்டிருப்பது தொழிலாளர் நலனுக்கு உகந்ததல்ல; இந்த விபரீத திட்டத்தால டிரைவர்களுக்கு கண்துடைப்பிற்காக சில சில்லறைகளைக் கொடுத்துவிட்டு வேலைப் பளு அதிகரிப்பும், கண்டக்டர் வேலைக்கு ஆட்குறைப்பு ஆபத்தும் ஏற்படும். வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிவரும் இந்நாளில் அரசின் இப்படிப் பட்ட விவேகமற்ற செயல் நாட்டின் நலனுக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கப் போகிறேம் என்று கூறப்படும் திட்டங்களுக்கும் விரோதமானதாகும். உண்மையிலேயே அமைச்சர் சிக்கன நடவடிக்கையை விரும்பியிருந்தால் உயர் பதவிகளில் உயர்ந்த சம்பளத்தில் அனுவசியமாக அதிகாரிகளை நியமித்திருப்பதை தவிர்த்திருந்திருக்கலாம். சம்பந்தப்பட்ட வேலைக்கு தகுதியான படிப்பில்லாத—வேலை நுணுக்கம் தெரியாத அதிகாரிகளைத் தனக்கு வேண்டியவர்கள் என்ற ஒரே காரணத்திற்காக நியமனம் செய்வதைத்தவிர்க்க வேண்டும். இப்பொழுதுள்ள பல உயர் பதவிகளை தவிர்த்து அனுவசியமான புதிய உயர் பதவிகளை உருவாக்காமல் இருந்தாலே பல ஆயிரக்கணக்கான ரூபாய் மிச்சம் ஆகும். லஞ்ச ஊழலையும், ஊதாரித்தனமான செலவையும் குறைக்க எவ்வளவோ யோசனைகளைக் கூறியும் அரசு கவனியாமல் இருப்பது வேடிக்கையாகவும் உள்ளது.

இந்த ஆட்குறைப்பு அபாயத்திற்கு ஆளாகும் போக்குவரத்து தொழிலாளியும், வேலையில்லாத் திண்டாட்டத்தால் தவிக்கும் தமிழக மக்களும் நிச்சயம் எதிர்ப்பார்கள். இந்த வருடம் 20 சதவீதம் போனஸ் கோரிக்கை வைத்து நிர்வாகத்திற்கு கடிதம் அனுப்பியுள்ளோம். இந்தக் கோரிக்கைக்கு செவி சாய்க்கவில்லை என்ருல் வேலைநிறுத்தம் செய்வதற்கு முடிவெடுக்க நிச்சயித்துள்ளோம். பெரும் பகுதி தொழிலாளர்களின் ஆதரவைப்பெற்றுள்ள எங்களது சங்கத்தைக் கலக்காமல் அமைச்சரும் நிர்வாகமும் எடுக்கின்ற சுயேச்சையான எந்த முடிவும் எங்கள் சங்கத்தைக் கட்டுப்படுத்தாது என்பது மாத்திரமல்ல இது ஒரு சுமுகமான தீர்விற்கு வழிகோலாது என்றும் கருதுகிறேம்.

நிர்வாகத்தாலும், அரசாங்கத்தாலும் உருவாக்கப்பட்ட தி. மு. க. சங்கத்தோடுமட்டும் பேசுவேன் என்ற அரசின் நிலைமை கண்டிக்கத்தக்கது. வருந்தத் தக்கது இந்தக் கொள்கை தொழிலாளர் நலனுக்கு முற்றிலும் விரோதமானது இந்தப் போக்கில் போய்க்கொண்டு 'தொழிலாளர் நல அரசு'' என்று பெருமைப்பட்டுக்கொள்வதில் எந்த நியாயமும், எந்த அர்த்தமும் இல்லை என்றே நாங்கள் கருதுகிறேம்'.

இவ்வாறு தோழர் கே. எம். அரிபட் தனது அறிக்கையில் குறிப்பிட்டு இருக்கிருர்.

## செங்கோட்டை மில்லைத் திறக்கும் வாக்குறுதியை அரசு மீறுகிறது

# கருமுத்துச் செட்டியாருக்கு விற்பதற்குச் சூழ்ச்சி!

செங்கோட்டை, செப். 24—

இங்குள்ள பலராமவர்மா மில்லை நடத்துவதற்கு மத்திய அரசிடம் 51 சதவிகிதக் கடன் கேட்டு தமிழக அரசு இன்னும் கடிதம் எழுதவில்லை என்ற சந்தேகம் தொழிலாளர்கள் மத்தியில் ஏற்பட்டுள்ளது.

மத்திய அரசின் துணை அமைச்சர் எல். என். மிஸ்ரா இந்த மில்லை நடத்துவதற்கு மத்திய அரசு உதவியளிக்கும் என்று வாக்களித்திருந்தும் இதைத் திறப்பதற்கான நடவடிக்கை எடுக்கப்படவில்லை. தமிழ்நாடு பஞ்சாலைக் கழகத்தின் தலைவர், மத்திய அரசுக்கு சிபார்சு செய்வது பற்றி வாக்களித்திருந்தும் எந்த நடவடிக்கையும் எடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

இதற்கு மத்தியில் இந்த மில்லை கருமுத்து தியாகராஜ செட்டியாரிடம் விற்க முயற்சி நடைபெறுவதாக பேச்சு அடிபடுகிறது. இதற்குத் தொழிலாளர் மத்தியில் எதிர்ப்பு ஏற்பட்டுள்ளது.

கருமுத்து தியாகராஜ செட்டியாருக்குச் சொந்தமான காவேரி மில்லை ஓட்டுவதற்குத் தொழிலாளர்களின் பஞ்சப்படியை ரூ. 65 வரை வெட்டியது போல் பலராம வர்மா மில்லை விலைக்கு வாங்கினலும் பஞ்சப்படி வெட்டப்படும் என்று தொழிலாளர்கள் அஞ்சுகின்றனர்.

11 மாதங்களாக இந்த மில் மூடிக் கிடப்பதால் தொழிலாளர்களின் கஷ்டத்தைப் பயன்படுத்தி, இந்த மில்லைத் திறப்பதற்கு வழி, கருமுத்துச் செட்டியாருக்கு விற்கப்படுவதற்கு இணங்குவதே என்ற பிரச்சாரத்தையும் தற்போதைய முதலாளியான சர்மா துவக்கியுள்ளார். இதற்கு ஐ. என். டி. யூ. சி. சங்கத்தின் தலைமை உடந்தையாக இருக்கிறது.

## ஏ. பி. டி. கம்பெனி முதலாளிக்குக் கருப்புக்கொடி!

பொள்ளாச்சி, செப். 24—

வேலையிலிருந்து நிறுத்தப்பட்டிருக்கும் 21 தொழிலாளர்களை வேலைக்கு எடுத்துக்கொள்ளக்கோரியும், போனஸ் கோரியும் உண்ணாவிரதப் போராட்டம் நடக்கும் ஏ. பி. டி. கம்பெனி தொழிலாளர்கள், கம்பெனி முதலாளி என். மகாலிங்கத்துக்கு செப். 20-ம்தேதி கருப்புக்கொடி காட்டினர்.

நகரசபை வரவேற்பைப் பெற அவர் வந்தபோது கருப்புக்கொடி காட்டப்பட்டது. இதில் உண்ணாவிரதப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்களின் மனைவி மார்களும் சக தொழிற்சங்கங்களைச் சேர்ந்த பெண்களும் கலந்து கொண்டனர்.

"மகாலிங்கமே, திரும்பிப்போ!" என்று பெண்கள் இடிமுழக்கம் செய்தனர்.

பின்னர் நடைபெற்ற கண்டனக்கூட்டத்தில் பலர் பேசினர்

## மின்சார தொழிலாளர்கள் "கண்டன நாள்'' போராட்டம்

ஈரோடு செப். 24—

போனஸ் மற்றும் தொழிலாளர்களின் முக்கிய கோரிக்கைகளை நிறைவேற்றுவதில், மின்வாரியத்தின் காலம் கடத்தும் போக்கை எதிர்த்து, மின்சார தொழிலாளர்களின் மத்திய அமைப்பின் அறைகூவலுக்கு இணங்க, ஈரோடை தலைமையாக கொண்டுள்ள, உற்பத்தி பிரிவு, திட்டப்பகுதியில் அனைத்துக் கிளைகளிலும் 17—9—71-ம் தேதி அன்று கண்டன தினத்தை அனுஷ்டித்தார்கள். மேட்டூர், ஈரோடு, சமயநல்லூர், பெரியார், பாபநாசம், கோதையாறு மின் நிலயங்களிலுள்ள பெரு வாரியான தொழிலாளர்கள் கண்டனதின அட்டை அணிந்து, ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்கள், கூட்டங்கள் நடத்தி தீர்மானங்கள் நிறைவேற்றினுர்கள்.

### ஆர்ப்பாட்டம்

உத்தப்பநாயக்கனூர், செப் 24

உத்தப்பநாயக்கனூர் பிரிவு அலுவலகத்தின் முன் நிர்வாகக் குழு உறுப்பினர், திரு. பி. தங்கவேலு, திரு. எஸ். பாலையா ஆகியோர் தலைமையில் 40க்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் 20 சதம் போனஸ் கேசுவல் தொழிலாளர் வேலை நிரந்தரம் பிடிமானப் பணத்திற்கு சரியான கணக்கு, வாரிசுகளுக்கு வேலை போன்ற கோஷங்கள் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

### உசிலம்பட்டி

உசிலம்பட்டி, செப். 24—

உசிலம்பட்டி பிரிவு அலுவலகத்திற்கு முன்பும் மின்சாரத் தொழிலாளர்கள் 20 சதம் போனஸ், கேசுவல் லேபர் வேலை நிரந்தரம் போன்ற கோஷங்கள் எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

## சினிமாநட்சத்திர.,.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில், சோவியத்யூனியன்—— 'நாரைகள் பறக்கின்றன,' 'கருப்புப் புள்ளியுடன் கூடிய வெள்ளை பிர்ச்' 'போரும் அமைதியும்,' 'அன்ன கரீனு' போன்ற அற்புதமான படங்களைத் தயாரித்து வெளியிட்டிருப்பது ஒன்றே, கலைத்துறையில் அங்கு நிலவும் படைப்புச் சுதந்திரத்திற்கு எடுத்துக் காட்டாகும்,'' என்ருர் பார்க்கப் போனல், சுதந்திரம் என்பது என்ன? நமக்கு நாமே வரம்புகளிட்டுக் கொள்ள நாமே ஒப்புக்கொள்வது தானே சுதந்திரம்! கருத்துச் சுதந்திரம் என்றபேரால் யுத்தத்தையும், சுரண்டலையும், குற்றங்கள், கொலைகளையும், மனோ விகாரங்களையும் போற்றிப்பாராட்டி கௌரவிக்கும் சுதந்திரத்தை ஒரு சோஷலிச சமூகம் சகித்துக்கொள்ள முடியாது, என்ருர் அவர்.

### விலைவாசிகள்

உணவுப் பண்டங்களின் விலைகளைப்பற்றி ஒரு நிருபர்கேட்ட கேள்விக்குப் பதில் அளிக்கையில், மிக மலிவான ஐஸ்கிரீம் 6 பேக்குகள் (காசுகள்) என்றும் விலை உயர்ந்த ஐஸ்கிரீம் 28 கோபக்குகள் தான் என்றும் கூறினுர். சாதாரணமாக ஒருமனிதர் சாப்பிடக் கூடிய உணவின் விலை 90 கோபக்குகள் என்றும் அவர் தெரிவித்தார். விலைகளைப் பற்றிப் பேசும் போது, பத்திரிகைள் விற்கும் கடைகளிலேயே அற்புதமான இசைத்தட்டுக்களும், 1அரை ரூபிள்களுக்கு மேற்படாத விலையில் விற்கப் படுவதுகுறித்ததனதுவியப்பை வெளியிட்டார். ''உடலுக்கும் உள்ளத்திற்கும் அவரவர்கள் தேவைக்கு ஏற்ப ஒவ்வொரு பிரஜைக்கும் உணவுத்தரப்படுகிறது. சோஷலிச நாட்டைப் பற்றி வரையறுத்துக்கூற, இதைத்தவிர வேறென்ன சொல்ல முடியும்?'' என்ருர் அவர்.

### நேரில் காணவேண்டும்

இந்திய மக்கள்பால், சோவியத் மக்கள் கொண்டுள்ள அன்பும், மதிப்பும் நேரில் கண்டுணர வேண்டியதொன்ருகும் என்று குறிப்பிட்டார் சீனிவாசன்.

பிரபல மலையாள திரைப்பட இயக்குநரான ராமுகாரியத், பத்திரிகை மாநாட்டிற்கு தலைமை தாங்கினுர்.

## இராசபாளையம் ஸ்ரீ சண்முகர் மில்

# திறப்பதற்கு சில தொழிற்சங்கங்கள் துரோக ஒப்பந்தம்!

இராசபாளையம், செப், 24—

இராசபாளையம் ஸ்ரீசண்முகர் மில்ஸ் கடந்த ஒன்றரை வருடங்களாக மூடிக்கிடப்பது தெரிந்ததே. இதுசம்பந்தமாக 2—7—71ல் அனைத்து கட்சி அனைத்து சங்கத்தினுடைய கூட்டம் நடைபெற்று, அரசாங்கத்திற்கு துணை தாசில்தார் மூலமாக மனு கொடுக்கப்பட்டது.

அதன் பிறகு, மில்லில் சிப்டு கூட்டம் போட்டு ஊர்வலம், பொதுக்கூட்டம் நடத்தப்பட்டன. முதலில் கலந்துகொண்ட தி.மு.க பிறகு ஆர்ப்பாட்டஊர்வலத்திலும்,பொதுக்கூட்டத்திலும் கலந்து கொள்ளவில்லை. மறுபடியும அனைத்துக் கட்சி, அனைத்துச் சங்கங்களும் கூடி (தி. மு க. தவிர)28—8—71ந் தேதி இராசபாளையம், சுற்றுக் கிராமங்களிலும் ஹர்த்தாலுக்கு ஏற்பாடுசெய்து வெற்றிகரமாகஹர்த்தாலும்,பொதுக் கூட்டமும் நடைபெற்றன.

இந்த ஒன்றுபட்ட போராட்டதின்விளைவாக, 7—9—71ல் மதுரையில் பேச்சுவார்த்தை நடத்த வரும்படி நிர்வாகத்திடமிருந்து போராட்ட செயல் கமிட்டிக்கு அழைப்பு வந்தது. அதன்படி 7—9—71ம் தேதி பேச்சுவார்த்தையில் நிர்வாகத்தரப்பில் கோபால் தினகரனும் மற்றும் நிர்வாகிகளும் போராட்ட கமிட்டியின் சார்பில் சி. ஐ. டி. யூ. சார்பாக எஸ். பெரியசாமி இந்திரா காங்கிரஸ் சார்பாக பி. எஸ். ராமச்சந்திரன், ஐ. என்- டி. யூ. சி. சார்பாக எஸ். பாலகிருஷ்ணன், ஏ. ஐ. டி யூ. சி சார்பாக பி.எம்.ராமசாமி, எச். எம். எஸ். சார்பாக எஸ். வி. ராஜேந்திரன், ஆகியோர்கலந்து கொண்டார்கள்.

நிர்வாகத்தின் சார்பாக-சம்பளம் குறைக்க வேண்டும் என்றும்ஆள்குறைப்புசெய்யவேண்டும் என்றும், டிஸ்மிஸ் செய்த 5 தொழிலாளர்கள் சம்பந்தமாக வற்புறுத்தக்கூடாது என்றும் கூறப்பட்டது.போராட்ட கமிட்டியின் சாபாக பழைய சம்பளம் குறையக்கூடாது என்று கூறப்பட்டது. மீண்டும் பரிசீலனைசெய்து 11—9—71ல் மதுரையில் பேச்சு வார்த்தை நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

10—9—71ல் இராஜபாளையம் புதுப்பாளையம் சத்திரத்தில் போராட்ட கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. ஐ. என். டி. யூ. சி சங்கம், ஏ. ஐ. டி. யூ. சி. சங்கம் எச். எம் எஸ். சங்கம் மற்ற கட்சிகளும்,சம்பளம் குறைத்து மில்லை திறப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. சம்பள வெட்டோ, ஆள் குறைப்போ, இருக்கக்கூடாது; மில்லை அடைக்கும்போது என்ன சம்பளம் இருந்ததோ அதைக் கொடுக்க வேண்டும்; ஒரு வருடம் மில் ஓடிய பிறகு, லாபமா நஷ்டமாஎன்று பரிசீலனைசெய்வோம் என்றுதான் பேச்சு வார்த்தை நடத்த வேண்டும் என்று மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சியின் சார்பாக சீ. நம்மாள்வாரும், சி. ஐ. டி. யூ. சங்கத்தின் சார்பாக எஸ். பெரியசாமியும் வலியுறுத்தி பேசினுர்கள்.மற்ற சங்கங்கள் இதற்கு ஒத்துக் கொள்ளாததால், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சி. ஐ. டி. யூ. சங்கமும் கூட்டத்திலிருந்து வெளிநடப்புச் செய்தன.

11—9—71ல் மதுரையில் ஸ்ரீ சண்முகர் மில் நிர்வாகத்திற்கும், தொழிலாளர்சார்பாக ஐ. என். டி. யூ. சி. சங்கம் ஏ. ஐ. டி. யூ. சி. சங்கம், எச். எம். எஸ். சங்கமும் லேபர் ஆபீசர்முன்னிலையில்-சண்முகர் மில்லை திறப்பதற்கு பஞ்சப்படி வெட்டு, ஆள் குறைப்பு, வேலைப்பளு ஆகியவைகளை ஒத்துக்கொண்டு மூன்று வருடங்களுக்கு வேறு எந்தக் கோரிக்கையும் கேட்கக்கூடாது என்று ஒவ்வொரு தொழிலாளியும் எழுதிக் கொடுத்துவிட்டு வேலைக்கு செல்ல வேண்டுமென்று ஒப்பந்தம் செய்துள்ளன. இதனுல் இந்தத் தொழிலாளர்கள் பாதிக்கப்படுவதோடு, மற்ற தொழிலாளிகளுக்கும் பெரும் பாதகமும் ஏற்பட்டுள்ளது.

இராசபாளையம் பகுதி பஞ்சாலைத் தொழிலாளிகள் இந்த மாதிரி துரோக ஒப்பந்தங்களை அனுமதிக்காமல் நீதி கிடைக்க ஒன்றுபட்ட போராட்டத்திற்கு தயாராகும்படி சி ஐ.டி. யூ. சங்கம்,கேட்டுக் கொண்டுள்ளது. (ந. நி.)

## ஹார்வி மில் தொழிலாளர் இரயில் நிறுத்தக் கிளர்ச்சி

# கோரிக்கை வெற்றி

மதுரை, செப். 24—

மதுரை ஹார்விமில் தொழிலாளர்கள் இரயில் நிறுத்தப் போராட்டம் நடத்தியதின் விளைவாக அவர்களது கோரிக்கை நிறைவேறியது.

மதுரைக்கு அருகில் உள்ள ஹார்விபட்டியிலிருந்து தொழிலாளர்கள் ஹார்விமில்லுக்கு இரயிலில்வந்து செல்வர். இவர்களுக்கென தனி இரயில் விடப்பட்டுள்ளது.

இரயில் பெட்டிகள் மிகப் பழுது அடைந்திருப்பதாகவும் மற்றும் சில வசதிகள் இல்லையென்றும், இதனுல் புதுப் பெட்டிகளை இணைக்க வேண்டும் என்றும் பல நாட்களாக கோரி வந்தனர். ஆனுல், இக்கோரிக்கைகள் நிறைவேற்றப் படாமையால் சில நாட்களுக்கு முன்பு இரயிலை நிறுத்திப் போராட்டம் நடத்தினர். இதனுல் இரயில் போக்குவரத்து சில மணி நேரம் தாமதப்பட்டது. உடனே சம்பந்தப்பட்ட அதிகாரிகள் உறுதி மொழி அளித்ததின் பேரில் போராட்டம் நிறுத்திவைக்கப் பட்டது.

தற்போது புதுப் பெட்டிகள் இணைக்கப்பட்டுவிட்டன.



இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி மதுரை—1.) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் : கே. முத்தையா.